# அனுபவ வைத்திய திரட்டு

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண்.. 489

# அனுபவ வைத்தியத்திரட்டு

பதிப்பாசிரியர் :
**புலவர்.ச. திலகம்**, பி.லிட்.,
தமிழ்த்துறை,
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்,**
**தஞ்சாவூர்.**

2006 ] [ விலை : ரூ. 60-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : அனுபவ வைத்தியத்திரட்டு |
| பதிப்பாசிரியர் | புலவர். ச. திலகம், பி.லிட்., |
| வெளியிடுபவர் | : இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 489 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : முதற் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2006 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 148 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும்<br>ஒளி அச்சு,<br>சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : மருத்துவம் |
| விலை | : ரூ.60-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் பயன்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக்கருவூலமாகவும் பன்மொழி நூற்களஞ்சியமாகவும் பன்மொழி ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது.

இந்நூலகம் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும் பிறநாட்டினரும் பயன்படுத்தி வருகின்ற ஓர் அரிய ஞான ஆலயமாகும்.

சித்தர்கள் எல்லாச் சமயத்திற்கும் அப்பாற்பட்ட சர்வசமய சமரச சன்மார்க்கத்தினைப் பாடியவர்கள். சாத்திரம் கோத்திரம் ஆகியவற்றை இகழ்ந்து தள்ளி மக்களிடம் பரிவும் அன்பும் கொண்டு மக்களில் மக்களாக வாழ்ந்த அவர்கள் மக்கள் உடலாலும் உள்ளத்தாலும் உயர்வுபெற முயன்றவர்கள். இவர்கள் மக்களின் நல்வாழ்விற்காக வகுத்ததே சித்த மருத்துவமாகும். தமிழ் நாட்டிலே பண்டுதொட்டு இன்றுவரை பரவலாகப் பயிலப்பட்டு வருவதால் சித்த மருத்துவத்தைத் தமிழ் மருத்துவம் என்பர். தமிழ் நாட்டில் உலோகங்களையும் இரச வர்க்கங்களையும் தமிழ் முறைப்படி நீற்றி பஸ்மங்களாகவும் சிந்தூரங்களாகவும் செய்வது மிக எளிய முறையாகும்.

நம் சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள சுவடிகள் தொகுப்பில் இச்சுவடிகள் "**அனுபவ வைத்தியத் திரட்டு**" பற்றிக் கூறுவனவாகும். இச்சுவடிகளை இந்நூலக தமிழ்ப் பண்டிதர் திருமதி ச. திலகம் அவர்கள் மிக நன்முறையில் பதிப்பித்துள்ளார்கள்.

இந்நூலில் அப்பிரகப் பற்பம், காந்த பற்பம், தாம்பிர பற்பம், இரச பற்பம், வங்க பற்பம், காரீய பற்பம், வேங்கில் பற்பம், திராபற்பம், பித்தளை பற்பம், எருகளை பற்பம், கெருடக்கல் பற்பம், கல்நார் பற்பம், நாக பற்பம் போன்ற 27 பற்பங்களையும், இரச்செந்தூரம் போன்ற செந்தூர வகையும், சுரக்குளிகை போன்ற குளிகை வகையையும் பற்றித் தெரிவிக்கப் பட்டுள்ளது. இவற்றின் பயனும் தீரும்நோய்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. வாதங்களுக்கான தைல வகைகள், மெழுகு வகைகள், எண்ணெய் வகைகள், அவை செயல்முறைகள், அவை தீர்க்கும் நோய்கள் போன்றவைக் கூறப்பட்டுள்ளன.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் அச்சில் வெளிவர, கணினி பிரிவில் பணிபுரிந்துவரும் அனைவருக்கும் எனது பாராட்டுதல் களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
***மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும்***
***இயக்குநர்,***
**சரசுவதி மகால் நூலகம்.**

*தஞ்சாவூர்.*
*16-9-2006*

# முன்னுரை

உலகின் பல்வேறு பகுதிகளில் பற்பல மருத்துவ முறைகளைக் கொண்டு, நோய்களைக் குணமாக்குகின்றனர். அம்முறைகளில் சித்த மருத்துவம், ஆயுர்வேதம், யூனானி, ஹோமியோபதி, அலோபதி என்னும் ஆங்கில மருத்துவம் ஆகியன அடங்கும். இது தவிர வேறு முறைகளிலும் நோய்களைக் குணமாக்குகின்றனர். முதல் மூன்று முறைகளும் இயற்கையிலிருந்து கிடைக்கும் வேர், செடி, இலை, கிழங்கு, விதை மற்றும் பல பொருட்களைக் கொண்டு மருந்து தயாரிக்கப்பட்டு மக்கள் நோயின்றி வாழ வழி வகுக்கின்றன. இதில் மிகவும் தொன்மை வாய்ந்த மருத்துவம், சித்த மருத்துவமேயாகும். இதனைத் தமிழ் மருத்துவம் என்றும் அழைப்பர்.

பண்டைக்காலத்தில் வாழ்ந்த சித்தர்கள் பல அரிய மருத்துவ முறைகளைத் தமது அனுபவத்தின் மூலம் தெரிந்து ஓலைச்சுவடிகளில் பொறித்து வழங்கியுள்ளனர். அவற்றில் பல சுவடிகள் உலகப்புகழ் வாய்ந்த நம் சரசுவதி மகால் நூலகத்தில் இடம்பெற்றுள்ளன. இச்சுவடிகளை ஆராய்ந்து அவற்றில் பதிக்கப்பெற்றுள்ள மருத்துவம் மற்றும்

உடல்கூறு மகத்துவங்களை வெளியுலகிற்கு வழங்கும் பணியினைத் தற்போது சரசுவதிமகால் விரைந்து மேற்கொண்டு வருகிறது. இத்தகைய முனைப்பான வெளியீட்டில் இந்த **அனுபவ வைத்தியத் திரட்டு** என்ற சில்லரை மருத்துவங்கள் கூறப்பட்ட நூலும் ஒன்றாகும். இந்நூல் பல சுவடிகளிலிருந்து தொகுத்து வழங்கப்பட்ட தொகுப்பு நூலாகும்.

இத்தொகுப்பு நூலில் பற்பவகைகள், செந்தூரவகைகள், லேகிய வகைகள், சூரண வகைகள், எண்ணெய் வகைகளும், அவற்றின் செய்முறைகளும் கூறப்பட்டுள்ளன. இம் மருந்துகள் இன்ன வியாதிக்கு இன்ன முறையில் கொடுக்கவேண்டும் என்பதும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

குழந்தைகளின் மருத்துவமும் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக பிள்ளைகளின் வரட்சி இருமலுக்கு மருந்து, மாந்தக் கழிச்சலுக்கு மருந்தும், பிள்ளைகளுக்கு உடம் பெல்லாம் கரப்பானாக இருந்தால் அதற்கு எண்ணெய் வகையும், அவற்றின் செய்முறைகளும் எளிதாகக் கூறப்பட்டுள்ளன.

தற்போது இந்நூல் மகாலில் உள்ள தமிழ்த்துறையில் மருத்துவப்பிரிவில் இடம்பெற்றுள்ள சுவடிகள் *84, 545, 725, 1471* ஆகிய எண்களைக் கொண்டதாகும். இந்த அனுபவ வைத்தியத்திரட்டு என்ற நூலில் பல மருத்துவமுறைகள் பாடல் வடிவத்தில் இருந்தாலும் வசன நடையில் கூறப்பட்ட மருத்துவ முறைகளையே தொகுத்துத் தரப்பட்டுள்ளன. உதாரணமாக மேகவாத சூலைக்கட்டுக்கு, ஆறாதப் புண்ணுக்கும் கூறப்பட்டுள்ள மருந்துகளும் செய்முறைப் பயிற்சியும் நன்றாக உள்ளன.

இதைத்தவிரப் பல புதுமையானப் பிரயோகங்கள் உள்ளபடியால் இதை மருத்துவர்களுக்கும், சித்த மருத்துவ ஆராய்ச்சித்துறையில் உள்ளவர்களுக்கும் பயன்படும் என்ற முறையில் இதைப் பதிப்பித்து உள்ளேன்.

இந்த நல்ல மருத்துவ நூலைப்பதிப்பிக்கும் பணியை அனுமதித்த இந்நூலக இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமாகிய திரு. சா. விஜயராஜ் குமார்,இ.ஆ.ப., அவர்களுக்கும், இந்நூலைப் பதிப்பிக்க அனுமதி வழங்கிய நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூலை விரைவாக அச்சிட்டு உதவிபுரிந்த கணினி அச்சகப்பிரிவினருக்கும், ஏனையோருக்கும் எனது மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

**ச. திலகம்**, பி.லிட்.,
தமிழ்த்துறை.
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,
28-8-2006.

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.

# அனுபவ வைத்தியத்திரட்டு

### அப்பிரகப் பற்பம்

நெல் கனமாய்த்தட்டி சாண் அகலம், சாண் நீளம், வீளவேர் பலந்தானொன்று மெழுகுபோல அரைத்துப்பூசி ஓட்டில் வைத்து, ஓடுமூடி சந்துவாய் சீலை செய்து, கெசப்புடத்தில் வைக்க பற்பமாகும். இதை எடுத்து வைத்துக்கொண்டு எலுமிச்சம்பழத்தை நாலாகக் கீறி புதுச்சட்டியில் வைத்து அதிலே கையாந்தகரைச் சாறு, நாழிவிட்டுக் காயவைத்துக்கொண்டு மேலேகூறிய பற்பத்தைப் பண எடை வைத்துக்கொண்டு, சாப்பிடவும்.

**தீரும் நோய்கள்:** பாண்டு வகை, குட்டம், சூலை, குறநோய் இவைகளுக்குத் தேனிலே கொள்ளத்தீரும்.

### காந்தப் பற்பம்

சிறியான் நங்கை அமுரிவிட்டு, இடித்துச் சாறுவிட்டு, வில்லை செய்து, மூன்றுநாள் காயவைத்து, வில்லைக் காய்ந்தபின்பு, ஓடு மூடி சந்துவாய் சீலைசெய்து, கெசப்புடம் வைக்க நீற்றுப்போகும். கிராணி, சோகைதீர மாதளங்காயைச் சாறுவார்த்து, சுக்கு அரைத்துக் கிண்டி, காந்தபற்பம் பண எடை ஒருமண்டலம் கொள்ளத்தீரும்.

பாண்டு, சலக்கழிச்சல், மேகங்கள் தீரச் சிறுபூக்கு அனுபானம் சஞ்சீவி சூரணத்தில் கொள்ளவும், மூலத்தில் கிராணிக்கெல்லாம் லோகபற்பம், காந்தபற்பம் இரண்டுஞ் சேர்த்துச் சூரணத்தில் கொள்ளத்தீரும்.

### தாம்பிரப் பற்பம்

தாம்பூரத்தட்டு 1 வாங்கி நெல்கணம் தகடாய்த் தட்டி ஆடாதோடைவேர், வென்னொச்சிவேர் சமனாய்ச் சேர்த்து எருக்கம்பால் விட்டு, அரைத்துத் தட்டின்மேல் பூசி ஓட்டில் வைத்து ஓடு மூடி சந்துவாய் சீலை செய்து மூன்றுசீலை செய்து கெசப்புடத்தில் நீறுமது செந்தூரந்தான். அட்டகுன்மந்நீர சூரணத்துடனே தேனுங்கூட்டி இருநேரங்கொள்ள வாயுவென்ற வர்க்கமெல்லாம் மாண்டுபோகும்.

ரசம் தன்னை சுத்திசெய்து, கரந்தைச்சாறு விட்டு, அரைத்து, மூன்றுநாள் அரைத்த பின்பு அடைபோலே தட்டி, உலரவைத்து ஓட்டில் வைத்துக் குக்குடத்தில் மாண்டு போகும்.

### ரசபற்பம்

பணவெடையில் பதினெட்டேதான் பனை வெல்லத்தில் கொள்ள சயங்களெல்லாந் தீரும். அஞ்சுநாள் இருநேரங்கொள்ளத் தீரும்.

### வங்க பற்பம்

வெள்ளீயக் கட்டி வாங்கி நெல்கனமாய் அடித்து, தகடு பலம்1, ஆடுதொடாவேர் பலம் 1, வெந்தோனிக்கிழங்கு பலம் 1 அரைத்து மேலே பூசி ஓட்டில் வைத்து ஓடுமூடி கெசப்புடத்தில் நீரும், மேகவகை இருபதுக்கும் பண வெடைதான் கொள்ளவும். ஆவாரைத் தயிலம் வாங்கி, தேன்விட்டு, மத்தித்து, இருநேரம் கொள்ளத் தீரும்.

**தீரும்நோய்கள்:** சிறுப்பூ, கல்லடைப்பு, சிறிசினங்கள், சதையடைப்பு, பிரமேகம் தீரும்.

### காரீயப் பற்பம்

முன்தகடுபோல் தட்டிக்கொண்டு, மொச்சி இலை, கவசமாக, கை அக்கியதோர் வெள்ளியீயம், பற்பம் போலே அளவாகப் புடம் போடத்தீரும்.

**தீரும்நோய்கள்:** காந்தி, நீர்க்கடுப்பு, வறட்சி, உஷ்ணங்கள் தீரும்.

### வேங்கில் பற்பம்

பசலை இலைதனை அரைத்துக் கவசமாக்கி ஓட்டில் வைத்து, கெசபுடந்தான் போடநீரிப்போகும். பணவெடை நெய் தேனில் உட்கொள்ளத் தீரும்.

**தீரும்நோய்கள்:** சூலை, குன்மம், வாய்வு, சயரோகம், உளமாந்தம் தீரும்.

### திரா பற்பம்

திராவில் தும்பை இலையைப்பூசி, கெசபுடத்தில் ஓட்டில் வைக்க திராதகடு நீறிப்போகும். நீர்ச்சிறுப்பூ, வண்டு, சில்விஷங்கள், குன்மங்கள், சயரோகங்கள், குட்டம், சூலை பதினெட்டும் தீரும். எட்டான வகை சூரணத்தில் தேன்கூட்டி இருநேரங்கொள்ள பத்து நாள் சாப்பிடத்தீரும்.

### பித்தளைப் பற்பம்

காஞ்சிரை வேர் அரைத்துக்கொண்டு, கனத்தில் பூசி வட்டான ஓட்டில் வைத்து ஓடு மூடி குக்குடத்தில் வைக்க மாண்டுபோகும்.

**தீரும் நோய்கள்:** வாய்வுகுன்மத்தில் கிராணி மூலம், பாண்டு, நீர்க்கரைப்பூ, வாய்நீர் ஊறல், குடல்வாய்வு, கெண்டை முதலியன.

**அனுபானம்:** நெய்தனில் கொள்ள தீரும்.

### எருகறை பற்பம்

கஸ்தூரி அரைத்து அப்பி கெசபுடத்தில் போடவும், தீரும். பாண்டுவகை, வீக்கஞ் சோகை, மகோதரம், இஞ்சி தேனில் கொள்ளவும்.

### கெருடக்கல் பற்பம்

ஆனைப்புலக்கிழங்கு அரைத்து அப்பினால் கெசப் புடத்தில் மாண்டு போகும்.

**தீரும்நோய்கள்:** கண்ரோகம், கடுப்பு, எலும்புருக்கி, உள்வரட்சி, அஸ்திசுரம், உள்ளுருக்கி ரோகம், வெட்டை முதலியன.

### கல்நார் பற்பம்

கொங்கிலவம்பட்டை தன்னை இடித்து, ஓட்டில் வைத்து அதின்மேல் கல்நாரை நடுவே வைத்து, மேற்படியும் பட்டையுள் பொடியே வைத்து, மேலோடு மூடி சீலை செய்து கெசபுடத்தில் நீரிப்போகும். பற்பத்தைத் தேனில் கொள்ள மூட்டோடே அசைந்த பல்லுமிருகிப் போகும். சிலேற் பனத்தை அறுத்துப்போடும். உஷ்ணத்தை அடக்கிப்போடும். நாளொன்றுக்கு இருநேரங்கொள்ள சயமிருமல், சுவாசகாசம், மந்தாரகாசம், மேகம்தீரும், தூதுவளை, லேகியத்தில் கொள்ளத்தீரும்.

### நாக பற்பம்

எரிகாலிலிலை அரைத்து இருகெசபுடந்தான் பன்ன அரைத்து வில்லை ரவ கண்டேதான் ஓட்டிலே வைத்துச் சீலைசெய்து புடத்தில் நீரிப்போகும்.

**தீரும்நோய்கள்:** கிராணி மூலம், ரோகம், வயிறு எரிவு, நெஞ்சு எரிவு, வாய்வுரோகம் தீரும். கடுகு, திரிபலாதி, திரிலகரி, கஞ்சாம், மஞ்சள் சூரணித்து தேனில் கொண்டுவிட மண்டலந்தான் கொள்ள தீரும்.

## வெள்ளிப்பற்பம்

பருத்ததொரு ரூபாயை வாங்கி செம்முள்ளியிலை அரைத்து கவசமாய் செய்து, கொண்டு குகைக்குள்ளே வைத்து மூடிச்சில்லிட்டுச் சீலை செய்து முழப்புடத்தில் வைக்க நீரிப்போகும். பற்பத்தை சிமிழிக்குள் பதனம் பண்ணு. குன்மம், நீர்க்கட்டு நீர், சிறுப்பூச்சு, சதையடைப்பு, கிறுகிறுப்பு, நெஞ்சிலுள்ள கபம் நீங்கிப்போகும். மூக்கிலுள்ள நீர்ப்பாய்ச்சல், பீனிசங்கள், மண்டைச்சூலை, புண்புரைகள் வாங்கிவிடும்.

**அனுபானம்:** அமுக்கிராவேர்,சூரணந்தானுமே தேன், நெய்யில் மண்டலங்கொள்ளத்திரும்.

## தங்க பற்பம்

தங்ககாசு வாங்கி, பனிதாங்கி மூலந்தன்னை சாந்துபோல அரைத்து அப்பி ஓட்டில் வைத்து சந்துவாய் சீலைசெய்து கெசபுடத்தில் பற்பமாகும். பற்பமிதை வைத்துக்கொண்டு, கண்டங்கத்தரி லேகியத்தில் கொண்டாக்கால் சிலேற்பனம், தொண்ணூத்தாறுசயரோகம், காசரோகம், உளமாந்தை தீரும். திரிகடுகு லேகியத்தில் குன்மம், மகோதரங்கள், வாய்வு, நீர், பலசூலை, சிரசநோய், கண்ணோய் தீரும். குட்டம், சிறை நோய் எல்லாம் தீரும். தேனில் பத்துநாள் கொள்ள பிரமேகம், நீரிழிவுத்தீரும். நெல்லிக்காய், லேகியத்தில் வைத்து மெல்லக் கொண்டிடவே பித்தம் போகும். சிவனார்வேம்பு சூரணத்தில் தின்ன புண் புரைகள் சில்விஷங்கள், வண்டுகடி தீரும். வேம்பின் சூரணத்தில் தின்ன வாதம் என்பதும் தீரும்.

## கெந்தகப் பற்பம்

கெந்தகம் 10 பலம் கொண்டுவந்து குண்டுசட்டியில் பசுவின்பால் விட்டு வேடுகட்டி அதின் பேரிலே கெந்தகம் பொடி பண்ணி பரப்பி சட்டிகொண்டு மூடிச்சீலை மண்

செய்து ஆறுநாழிகை வேகவைத்தால் கெந்தகம் உருகி பாலில் விழுந்துருக்கும். அதையெடுத்து கத்தாளச்சாறு முன் போல விட்டு வடிகட்டி, கெந்தகம் பரப்பி அந்தப்படிவேகவிட்டு எடுத்து பசுவின் நெய்யில் எடுத்துக்கொண்டு மஞ்சள்சாறு, இஞ்சிச்சாறு நீரிலிட, வயிற்றுவலி தீரும். தேனிலிட குன்மம் தீரும். திமிட்டிப் பழத்திலிட ஊதுகாமாலை தீரும். குப்பமேனிச் சாற்றிலிட இருமல் தீரும். பசுவின் நெய்யிலிட உளமாந்தைத் தீரும். சாரணச் சாத்திலிடக் கிராணி தீரும்.

### மண்டூர பற்பம்

அதிகமாஞ் சோதி சாணங்கரைத்துப் பூசி மண்குகையில் சில்லிட்டுப் போட்டு, சீலைகொண்டு வாயில் செய்து பத்தியுடன் கெசபுடத்தில் குகைநீரின், பரிசானவார்த்து போல நீரிப்போகும். எடுத்து வைத்துக்கொண்டு தேனில் கொள்ளவும். பண எடை கொள்ளவும்.

**தீரும் நோய்கள்:** பாண்டுவகை, வீக்கம், விஷபாகம், விஷநீர் எல்லாந் தீரும்.

### அஞ்சனக்கல் பற்பம்

புளியஞ்சீரை, குகையாய் பண்ணி மேல்மூடி கொண்டு செய்து, அஞ்சனக்கல் நிரையாய்ப் போட்டு, மண்சீலை செய்து கெசப்புடத்தில், சங்கது போல நீறீப்போகும். வைத்துக்கொண்டு தேனில் கொள்ளவும். தண்ணியிலே போட்டவுடன் மிதக்கும். வைத்தியம் இருபதுக்கும் தேனில் கொள்ளத்திரும்.

### தாளகப் பற்பம்

தலையோடுதனைப் பொடித்துக்கொண்டு சுண்ணாம்பு தண்ணீர்விட்டு, அரைத்து குகையாய்ப் பண்ணி மேல்மூடி ஒன்று காய வைத்து அதினுள்ளே களிப்பாக்கான தாளகத்தின் கட்டிவைத்து சீலைசெய்து காயவைத்து காய்ந்த பின்பு

குக்குடத்தில் நீறிப்போகும். வைத்துக்கொண்டு தேனில் கொள்ளவும்.

### தாளகப் பற்பம்

தலையோடுதனைப் பொடித்துக்கொண்டு, சுண்ணாம்பு தண்ணீர்விட்டு, அரைத்து குகையாய்ப் பண்ணி மேல்மூடி ஒன்று காயவைத்து அதினுள்ளே களிப்பாக்கான தாளகத்தின் கட்டிவைத்து சீலை செய்து காயவைத்து காய்ந்த பின்பு குக்குடத்தில் நீறிப்போகும். வைத்துக்கொண்டு தேனில் கொள்ளவும்.

**தீரும்நோய்கள்:** சயரோகம், மந்தாரகாசம், கபமீளை, இருமல், உளமாந்தை குறை, நோய்குட்டம், வண்டுகடி, எலிகடிகள் எல்லாந்தீரும்.

### சாதிலிங்கப் பற்பம்

சாதிலிங்கக் கட்டி வாங்கி சிவமூலிவேருபட்டை, அரைத்துக் கட்டி குகை தனிலே வைத்து, மூடிசந்து வாய் சீலை செய்து குக்குடத்தில் நீறிப்போகும். தேனில் கொள்ளவும்.

**தீரும்நோய்கள்:** குன்மவாய்வு, சன்னிவாதம், பாரிசவாயு, சூலை, இருமல், ஈளை, இளைய பூசுரமுந்தீரும்.

### வீர பற்பம்

அப்பைக் கிழங்குதனைக் குகையாய் செய்து வீரந்தன்னைக் குகைக்குள் வைத்து, சில்லுப்போட்டு, சீலைசெய்துக் கெசபுடம் போடவும். நீரும் நெய்யிலாவது தேனிலாவது இருபணவிடை கொள்ளவும்.

**தீரும்நோய்கள்:** சூலை, குன்மம், வாய்வு தீரும்.

## பொரிகார பற்பம்

பொரிகாரக்கட்டியை வாங்கி சங்கை நீத்து, அரைத்து குகையாய் செய்து அதனுள் சீல்லும் செய்து குகையில் நிரையா பொரிக்காரம் வைத்து வரைந்திடும் சீலை செய்து குக்கிடம் வைத்து காரம் நீரும். நெய்யில் தேனில் கொள்ள நீர்க்கடுப்பு மாறும். கல்லடைப்புந் தீரும். துத்திய சதையடைப்பும், நீர்த்தோஷம் தீரும்.

## சாத்திர வேதிபற்பம்

முலைப்பால் அதனியை எருக்கம்பால் சேர்த்து, மேற்படி சரக்கை குழி அம்மியில் போட்டு முலைப்பால் விட்டு அரைத்து உருண்டைசெய்து குக்குடம் போட தீரும். இஞ்சிச்சாற்றில் கொள்ள சுரமுந்தீரும். பாலில் கொள்ள சுரமுந்தீரும். வெண்ணெயில் கொள்ள சுரம் உஷ்ணமுந்தீரும்.

## குந்திருக்கப் பற்பம்

பன்றியின் பாலைவிட்டு, அரைத்து உருண்டைசெய்து, ஓட்டில்வைத்து மேலோடு மூடி மண்சீலை செய்துக் குக்கிடத்தில் போட தீரும். கடுப்பு குத்து பாணியும், புண்ணும் தீரும். பசுவெண்ணையில் கொள்ளவும்.

## பவள பற்பம்

முசலின் ரத்தம் விட்டு அரைத்து காயவைத்து சட்டியில் வைத்து மேல் ஓடு மூடி குக்கிடத்தில் தீரும். தூதுவளை நீர் அல்லது தேன் நீறு கொள்ள சயங்கள் அகன்று போகும். இருமல், காசந்தீரும்.

## வயிர பற்பம்

பெண்டுகள் சுரோணிதத்தைப் பேணி விட்டரைத்து, வில்லை செய்து,காயவைத்து ஓட்டில்வைத்துக் கெசப் புடத்தில் தீர்க்கமாய் நீரிப்போகும். நித்தியந் தேனில் கொள்ளவும்.

## இரத்தின பற்பம்

உமிரியை அரைத்துக்கொண்டு குகைபோல பண்ணி அதினுள்ளே ரெத்தினம் வைத்து சில்லுப்போட்டு, சுத்தியே சீலைசெய்து குக்குடத்தில் நன்றாய் நீரும். இந்த பஸ்பத்தில் ஒளிந்திடும் நோய்களெல்லாந்தீரும்.

## நாலு நாளை மாறலுக்குக் கஞ்சி

மிளகுப்பொடி கதலிப்பழத்துக்குள் வைத்து நூல் கொண்டு, சுத்தி உமிக்காந்தலில் சுட்டு குளிர் வந்த உடனே மூணுநாள் தின்ன நாலு நாளை மாறல் தீரும்.

## நீர்க்கடுப்புக்கு

அத்திப்பழப்பூ தட்டிப்போட்டு, ஒருபிடி பழுப்பு புதுச்சட்டியில் போட்டு இரண்டுபடி தண்ணீர்விட்டு, கால்படியாகக் காய்ச்சி இப்படி மூன்றுநாள் ஆறு பொழுது கொடுக்க நீர்க்கடுப்புத்தீரும்.

## இரசச்செந்தூரம்

கெந்தி, புளியாரைச்சாத்தில் செனிப்படங்க அரைத்து அண்ட மஞ்சக் கருவைத்து அரைத்து, மருந்தைப் போட்டு, மறுஒடுகொண்டு மூடி புளியாரை அரைத்து விரல்கணம் கவசம் கட்டி ஒருசீலை மண்செய்து சாணம் புடம் இடச்செந்தூரம்.

## நாலு நாளை மாறலுக்கு

பொன்னாங்கானி இலையும் வேரும், சீந்தித்தண்டு இலையும் கருக்கிப் பசுவின் பாலில், பிசைந்து பிழிந்துப் போட்டு ஆழாக்கு நல்லெண்ணெய் விட்டு எரித்து, வடித்து சிவந்த குங்கிலியம் பொடிசெய்து தூவி இறக்கிக்கொடுக்க நாலு நாள் மாறல் தீரும்.

## சுரக்குளிகை

கெவுரிப்பாஷாணம், துத்தம், துருசு, கெந்தகம், ஆக இவ்வளவும் சமனாய்க்கூட்டி, ஊமத்த இலைச்சாறு விட்டரைத்து மிளகு அளவு உருண்டை பண்ணி குளிர் வந்த சுரத்துக்கு இஞ்சிச் சாத்திலிடவும். விடாசுரத்துக்கு முலைப்பாலிடவும். பத்தியம், பால், கஞ்சி, சாப்பிடவும்.

## பிள்ளைகளுக்கு (பிள்ளை வயற்றில் இறந்தால் பிள்ளை விழ மருந்து)

பிள்ளை வயத்திலே செத்தால் மூணுவருஷத்து பருத்தியிலை கொண்டுவந்து அரைத்து நெய்யில் குழப்பி விழுங்க பிள்ளை விழும்.

## வேறு

## பிள்ளையளுக்கு மாந்தமானால் செய்யுங்குணம்

சீறியவன் வயறு சீறி சிலத்திடும்
சீறிப்பார்க்கும் கறியுடன்
சோறு கக்கும் கையினில் தங்காது
சத்தும் ஆறே
சோகும் பிள்ளை அறைக்கும்
கீழ் குனிந்திருக்கும்
வெறிக்கப் பார்க்கும் விஷமுள்ள மாந்தந்தானே.

பிள்ளையும் கனத்திருக்கும். பிரண்டைபோல பின்னலாகும். உள்ளமும் அஞ்சி வந்து, கன்னி உடம்பினில் வேடித்துக் கட்டி துள்ளியும், கையில் தூங்காது. துணுக்கெனச் சுழலும். பிள்ளைகள் மாங்குரலுமந் தாழ்ந்து கண் குளிந்திருக்குந்தானே. இந்தப்படி உள்ள குணம் பிள்ளையிடத்தில் கண்டால் மாந்தமென்றறிந்து கொள்ளலாம்.

## மாந்த வகைக்கு மருந்து

குட்டிக்குறுஞ்சா வேரு, வரப்பூலாவேர், நரி தின்னி வேர், சன்னி நாயன் வேரும், உள்ளி, வசம்பு, நல்லெண்ணெயில் கொதிப்பித்து, தாய் முலையில் தடவி வர முலைக்குத்துத் தீரும். அல்லது உத்தம தாளிவேர், சாரணைவேர், மிளகு தக்காளிவேர், பாகல்வேர், ஒருபிடி மிளகும், உள்ளி, வசம்பு, கருஞ்சீரகமும் இவை எல்லாம் நெய்யிலரைத்து உள்ளே கொடுக்கவுந் தீரும். அல்லது மூணு ஆவரை இலையும், மூணு பீளை இலையும், மூணு அவரை வேரும், விளாவிலையும் அரைத்து உள்ளுக்குக் கொடுத்து துவாலை இடவும் தீரும். அல்லது காற்றொட்டி வேரும், கொம்மட்டிவேரும், சூரைவேரும் இது மூன்றும் குளிசமாடி பிள்ளைக்குக் கட்ட மாந்தம் குணமாகும். அல்லது நீர்ப்பூலாத் தோலும், முருங்கை வேரும், பச்சரிசியும் இடித்துத் தாய் தின்ன பிள்ளைக்கி மாந்தம் முதலான பிணி தீரும். அல்லது பிடாவேர், காயாவேர், பொடுதலைச் சமூலமும், சங்கங்குப்பி, புங்கவேர், உத்தாமணிச் சம்மூலமும், உள்ளி, வசம்பு, மிளகும், கடுக்காயும், அசமதாகமும், திப்பிலியும், கோஷ்டமும், இதை அரைத்து வைத்துக்கொண்டு முருங்கை இலைச்சாறு உழக்கு உத்தாமணிச்சாறு உழக்கு, கள்சாறு உழக்கு, நல்லெண்ணெய் உழக்கு, ஆமணக்கெண்ணெய் உழக்கு, இதெல்லாம் கூட்டி அரைத்து இருந்த மருந்தையும் கூடப்போட்டு கொதிக்கவைத்து மெழுகுபதத்திலே வடித்து வைத்துக் கொண்டு, உள்ளே கொடுக்க மாந்தமெனப்பட்டதெல்லாம் தீரும்.

பிடா இலைச்சாறும், ஆனா இலைச்சாறும், சாரை இலைச்சாறும், வேலிப்பருத்தி இலைச்சாறும், பேய்ப்பீர்க்கு இலைச்சாறும், இவை சமனாகக் கூட்டி கருஞ்சீரகம், அசமதாகம், உள்ளி, வசம்பு அரைத்து எருமை வெண்ணெய் கொதுப்பித்துக் கொடுக்க வயிறு கழிகிறது நிற்கும்.

**வேறு**

சூலை இலையும், உத்தாமணி இலையும், உபாய வேரும், கருஞ்சூரை வேரும், சாரணைவேர், பொடுதலை வேர், குப்பைமேனி வேர், வேலிப்பருத்திவேர், பாகல்வேர், உள்ளி வசம்பு, கடுக்காய், ஈரவெங்காயம் இவை எல்லாம் அரைத்து ஆமணக்கு எண்ணெயில் கொதிப்பித்து பிள்ளைக்கு பேராமாந்தமாய் இருந்து வயிறு கழியாமல் இருந்தால் உள்ளே கொடுக்க வயிறு கழியும்.

வேலிப்பருத்திவேர், நிலப்பனைவேர், சாரணைவேர், இது சமனாகக்கூட்டி, விளக்கெண்ணெயில் கொதிப்பித்து வித்து முலையில் தடவி தடவி முலைக்குடுக்க வயிறு கழியும்.

**பேய்மாந்தமது செய்யுங்குணம்**

பருகுபருகென்று பார்க்கும். வலிப்பெடுக்கும். அழும். பலகுணம் பண்ணும். போகிரெனக் கழியும்.

இதற்கு மருந்து: கைய்யான் தகரை இலை, வேலிப்பருத்தி இலை, ஆனா இலை, பானா இலை, செருப்படி இலை, குப்பைமேனி இலை, சாரணை இலை இதுவெல்லாம் சமனாகக்கூட்டி சட்டி காயவைத்து அதிலே தீவைத்து நல்லெண்ணெய் உழக்கு விட்டு உள்ளிவசம்பு கூடப்போட்டு, சோறாகக் கொதிக்கவைத்துப் பதத்திலே இறக்கி வைத்துக்கொண்டு முலைப்பாலிலே ஒரு காசெடை உள்ளுக்குக் கொடுத்து மேலும் தடவவும். பேய்மாந்தம் தீரும்.

**காய்ச்சலுக்கு மருந்து**

| | |
|---|---|
| ஆனை நெருஞ்சில் ஈர்க்கு ஒருபிடி | பானுயீர்க்கு ஒருபிடி |
| பேய்ப்பீர்க்கு ஒருபிடி | ஈண்டு ஈர்க்கு ஒருபிடி |
| விஷ்ணுக்கிராந்தி ஒருபிடி | நன்னாரிவேர் ஒருபிடி |
| தூதுவேளைவேர் ஒருபிடி | சீந்தில்தண்டு ஒருபிடி |

ஓரிலைத்தாமரை ஒருபிடி
பொன்னாங்காணி ஒருபிடி
இஞ்சிவேர் ஒருபிடி
சிறுகீரை ஒருபிடி
வெதுப்படக்கிவேர்
ஒருபிடி

இதையெல்லாம் நறுக்கிப்போட்டு

ஏலம்
செண்பகப்பூ
கோஷ்டம்
சாதிக்காய்
கொத்தமல்லி
இலவங்கம்
செங்கழுநீர்
அதிமதுரம்
பற்பாடகம்

இதையெல்லாம் இடித்துப்போட்டு குறுணி நீரை விட்டு உரியாகக் காய்ச்சி வைத்துக்கொண்டு, கடைச்சரக்கை அரைத்து நீரில் கலந்து மூன்று நாளைக்குக் கொடுக்கவும். காய்ச்சல் தீரும்.

பொடுதலைக்காய் ஒரு சிரங்கைக்கொண்டு வந்து தட்டி காயவைத்து வறுத்து அதிலே இருநாழி மோர்வார்த்து ஊறவைக்க மோர்முறிஞ்சிருக்கும். அந்தத் தண்ணீரை இறுத்து ஆறவைத்துத் தாகமான நேரம் கொடுக்கத் தாகம் தீரும். அல்லது வில்லைவேர் இருநாழி தண்ணீரிலே போட்டு நாழியாகக் காய்ச்சி வைத்துக்கொண்டு தாகத்துக்குக் கேட்ட நேரம் கொடுக்கத் தாகம் தீரும்.

வெளிச்சப்பிசின்
கருஞ்சீரகம்
வேலிப்பருத்திவேர்
மிளகரணைவேர்
ஈரவெங்காயம்
நல்லமுள்ளிவேர்
சாரணைவேர்

இவையெல்லாம் சமனாகக்கூட்டி அரைத்து உழக்கு சித்தாமணக்கெண்ணெயில் கொதிப்பித்து வைத்துக் கொண்டு, காசத்தினை எண்ணெய் உள்ளுக்குக் கொடுத்து மேலும் துவாலை இடவும். இருமலும், வழலைக்கட்டும், வயிறு பொருமலும், காய்ச்சலும், கரப்பான் மேலே வெடித்திருந்தால் மேலே தடவவும்.

தூதுவேளை சமூலமும், வேலிப்பருத்திச் சமூலமும், சமனாகக்கொண்டு வந்து துவைத்துச் சாறு பிழிந்து வறகு வைக்கோலை சும்மா நிலத்திலே போட்டு எரித்து நிலமஞ்சுட்ட பிறகு அந்த சாத்தை நிலத்தை குத்தி சுட கையினாலே குழப்பி, உச்சந்தலை தொடுத்து உடம்பெல்லாம் பூசவும். பிள்ளைக்கு வயிறு கழிந்து பொருமலும் காய்ச்சலும் நிற்கும்.

வில்லைவேர், பாவட்டைவேர் பிடுங்கி இழைத்த பொடி இது. சேர் ஒரு அளவாய்க்கூட்டி சட்டி காயவைத்து வறுத்து அதிலே நாழித்தண்ணீர் விட்டு ஊறவைத்து ஒவ்வொரு பாலடை இரண்டு நேரம் கொடுத்துவரவும். இதிலே தவனமெடுத்து நாவுலர்ந்தால் தண்ணீர்மிட்டான் கிழங்கு கொண்டு வந்து நரம்புத் தோல் போக்கி துவைத்துச் சாறுகொண்டு நற்சீரகம் அரைத்து குழப்பி உள்ளே கொடுக்கவும். தவனமும், மாந்தமும் தீரும்.

பாவட்டை ஒருபிடி — அனுஈர்க்கி ஒருபிடி
பானு ஈர்க்கி ஒருபிடி — மாவிலங்க ஈர்க்கி ஒருபிடி
நுணா இலை ஒருபிடி

இது சட்டியிலே போட்டு சுக்கு, மிளகு, கடுக்காய் முடிந்து கூடப்போட்டு இருநாழி தண்ணீர்விட்டு, நாழியாக் காய்ச்சி வைத்துக்கொண்டு, ஒவ்வொரு பாலடை இரண்டு நேரமும் கொடுக்கவும். மாந்த சுரமானதெல்லாம் தீரும்.

**நீர்க்கணத்துக்கு**

பருத்திப்பிஞ்சு, — அத்திப்பிஞ்சு,
துடரிப்பிஞ்சு, — ஆவாரைப்பிஞ்சு,
கருஞ்சீரகம்

நறுக்கி முலைப்பாலிலாவது பிசைந்து சீலையில் பொட்டணமாகப் பிடித்துப் பிழிந்து அந்தச்சாற்றிலே பசுவின் வெண்ணெயைக் குழைத்து உள்ளே கொடுக்க நீர்க்கணம் தீரும்.

### பிள்ளைகளுக்கு வறக்கணத்துக்குக் குணம்

நாக்கு வெளுத்திருக்கும், வறக்கணத்துக்கு தூதுவளை வேரும், இலையும், துவைத்துச் சாறுபிழிந்து கொண்டு அந்த மருந்திலே கூட்டிக் குடிக்க வறக்கணம் தீரும்.

### நீர்க்கணமானால்

முருங்கை இலையை வாயினாலே உருவி உள்ளி, வசம்பு சுட்டு வைத்துக்கொண்டு கூடப்போட்டு மென்று, அந்தச்சாத்திலே இரண்டு காசு எடைச்சாறு உமிஞ்சு முலைப்பாலில் சாரித்து உள்ளே கொடுக்கவும். வயிறு பொருமல் தீரும்.

### காய்ச்சல், இருமல் தீர மருந்து

ஆனாவேர்
பானுவேர்
பாவட்டைவேர்
சங்கவேர்
கிளாவேர்

சமனாகக் கூட்டி நறுக்கி உள்ளி வசம்பு ஒருபிடி அசமதாகமும் கூட ஒரு சட்டியிலே போட்டு இருநாழி தண்ணீர் வார்த்து, நாழியாகக் காய்ச்சி உள்ளே கொடுக்கக் காய்ச்சலும், இருமலும் தீரும்.

### பிள்ளைகளுக்கு மை மருந்து

துத்தம், துருசு சமனாகக் கூட்டிக்கலசத்து தூருலே போட்டு மூட கொத்தான் சாறும், கையான்தகரைச்சாறும் வார்த்து நன்றாய் இழைத்து, அதன் பிறகு பசுவெண்ணெய்ப் போட்டு இழைத்துச் சிமிழில் வைத்துப் பிள்ளை கண்ணிலே இட வயிறு கழியும். சகல வியாதியும் தீரும்.

### பிள்ளைகளுக்குக் கணம், குணம்

பிள்ளைகளுக்கு கணம், வயத்திலே தாக்கி வயிறு கழியாமல் வலிச்சு அழுகிறதுக்கு மருந்து, பிள்ளைகளுக்கு

நெஞ்சுக்கட்டுக்கும், இருமலுக்கும் வளலை விட மருந்து, பிள்ளைக்கி வரட்சி இருமலானால் மருந்து, பிள்ளைக்கி மாந்தமாய் வேப்பிலைச்சாறு போலே கழிந்தால் மருந்து, பிள்ளைகளுக்கு பல தோஷமாய் உடம்பு வத்தி மெலிந்தால் பிள்ளைக்கிக் குளிசம் கட்ட மருந்து.

முடக்கொத்தானும், ஈரவெங்காயமும் நறுக்கி சித்தாமணக்கெண்ணெயில் கொதிக்கவைத்து உள்ளுக்குக் கொடுத்து வயிற்றில் தடவ தீரும். அல்லது நன்று, தினமும் நல்லவேளைவேர் ஒரு வேரும், தாளிப்பூவும் கூட்டி நறுக்கி முலைப்பாலில் பிசறி சீலையில் பொட்டணமாகப் பிடித்து பிழிந்து அந்தச் சாறு உள்ளே கொடுக்கக் கணம், வயிறு வெந்ததும், வயிறு வலித்து அழுகிறதும் தீரும்.

துளசி இலை ஒருபிடி, மிளகு தக்காளி இலை ஒருபிடி, புழுங்கல் அரிசியும் ஒரு சிரங்கை கூட அரைத்து நெய் வார்த்து அடைசுட்டு தினம் ஐந்து அடை தாயார் திண்ணவும். பத்தியம் கார்க்கவும்.

**பிள்ளைகளுக்கு வரட்சி இருமலுக்கும், நெஞ்சு நோக்காட்டுக்கும் நெய் பண்ண**

| | |
|---|---|
| தூதுவளைவேர் | செம்முள்ளிவேர் |
| நன்னாரிவேர் | சாரணைவேர் |
| சித்தாமுட்டிவேர் | பேராமுட்டிவேர் |
| செங்கத்தாரிவேர் | சிறுகீரைவேர் |
| சீதர செங்கழுநீர் | ஓரிலைத்தாமரைவேர் |
| வில்வவேர் | பொன்னாங்காணிவேர் |

இந்தவேர் எல்லாம் சமனாக ஒவ்வொரு பிடி

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | வெளிச்சைப்பிசின் |
| ஏலம் | இலவங்கம் |
| செண்பகப்பூ | செங்கழுநீர் |
| கோஷ்டம் | அதிமதுரம் |
| சாதிக்காய் | கொத்தமல்லி |
| நற்சீரகம் | |

இவை ஒவ்வொரு பலமும், ஈரவெங்காயம் இரண்டு பலமும் ஆகக்கூட்டி முருக்கிலையும், தூதுவளை இலையும் சமனாகக்கொண்டு வந்து துவைச்சு அதுலே நாழிச்சாறு பிழிந்துகொண்டு, அதிலே நாழி பசுவின் நெய்விட்டுக் கலந்து அதிலே முன் சொன்ன வேர்வகையும், கடைச்சரக்கையும் அரைத்துக் கூடப்போட்டு கொதிக்கவைத்து, மெழுகு பதத்திலே வடித்துக்கொண்டு, பிள்ளைக்கி இரண்டு காசெடை அந்தி, சந்தி, கொடுத்துவர எல்லா வரட்சியும், வழலைக் கட்டும் தீரும். இதுக்குப் பத்தியம், கைப்பு, புளிப்பு, பிலாத்தொடாமல் இருக்கவும்.

ஒரு பாக்களவு ஊனுப்பருப்பும், முத்தின முருங்கையிலையும், உள்ளி வசம்பு கூட்டி, நறுக்கி நீர்ச்சுவற வறுத்துச்சீலையிலே பொட்டணமாகப் பிடித்து முலைப்பால் வாங்கி அதிலே பொட்டணத்தை வைத்து உள்ளங்கையில் மத்திச்சுப் பிழிந்து பிள்ளைக்கி உள்ளே கொடுத்து உச்சந்தலையிலும் தடவவும். நாடி நரம்பெல்லாம் தடவவும். இந்த மருந்து மூணு நாளைக்கி இரண்டு நேரமும் கொடுத்துத் தடவவும். கைப்பு, புளிப்புத் தவிரவும், தீரும்.

இண்டை இலை ஒருபிடி, சங்க இலை ஒருபிடி, தூதுவளை ஒருபிடி, கடுக்காய், மிளகு இதுவெல்லாம் நறுக்கி, உரித்தண்ணீரில் ஊறவைத்து உள்ளே கொடுக்க இருமல் தீரும்.

## பிள்ளைகளுக்கு கரப்பானாக உடம்பெல்லாம் வெடித்தால் எண்ணெய்

| | |
|---|---|
| கடுக்காய்-15 | ஈரவெங்காயம்-10 |
| கருஞ்சீரகம் ஒரு சிரங்கை | கள்ளிப்பால் ஒரு சிரங்கை |

இதுவெல்லாம் சித்தாமணக்கெண்ணெயில் கொதிப்பித்து வைத்துக்கொண்டு, பிள்ளைக்கு நாலு காசிடை உள்ளே கொடுக்கவும். தாய், பத்தியம்,புளிப்பு நீக்கவும். இது வீக்கம் தீரும்.

திரட்டு-3

கிரந்தி நாயகம் வேரும்,

விரையும் தகரைவிரையும், வேரும்,

குண்டுமணி விரையும், வேரும்,

| | |
|---|---|
| குட்டிவேளைவேர் | வெம்பாடைவேர் |
| புலிதுடக்கிவேர் | நெய்க்காய்வேர் |
| வாகைவேர் | வேப்பவேர் |
| இலுப்பைவேர் | புங்கவேர் |
| பெரும்பிரணிவேர் | |

இதுவெல்லாம் ஒவ்வொன்று இரண்டு காசெடை கூட்டி, நறுக்கி, பூதகரப்பான் பட்டை, கார்போகரிசி, கெந்தகம் இதுவும் இரண்டு காசெடை நறுக்கி, நல்லெண்ணெயில் கொதுப்பித்து வைத்துக்கொண்டு பிள்ளைக்கி காலமே மோர் வயிறு நிரம்பப் புகட்டி, மேலுக்கு எண்ணெயிட்டு, பகலில் மேலாய் இலுப்பைப் பிண்ணாக்கு அரைத்துக் குளிப்பாட்டவும். மூன்று நாளைக்குள் கொள்ளிக் கரப்பான் தீரும்.

குட்டிக்குருஞ்சாவேர், குட்டிவிளாவேர், செங்கத்தாரி வேர், மிளகரணைவேர், உள்ளி, வசம்பு, கருஞ்சீரகம், நல்லெண்ணெயில் கொதிப்பித்து, மேலுந்தடவி தலையிலும் இடவும். இனி உள்ளுக்குக் கொடுக்கவும். மருந்து நன்னாரி வேர், மேல்தோலைச் சீவிப்போட்டு, நற்சீரகம், கூட்டி அரைத்து நல்லெண்ணெயிலாவது நெய், பாலாவது கொதிக்க வைத்து உள்ளே கொடுக்க சட்டைக்கரப்பான் தீரும்.

## பிள்ளைகளுக்கு வயிறு கழியவும், வயிறு கழியாமல் இருக்கவும்

வேலிப்பருத்திவேர், நிலப்பனைவேர், சாரணைவேர் மூன்றும் சனங்கூட்டி விளக்கெண்ணெயில் கொதிப்பித்து வைத்துக்கொண்டு, முலையில் தடவி, முலை குடிக்க, பிள்ளைக்கு வயிறு கழியும்.

புங்கம்பட்டை, ஆமங்குருந்தவேர், வெளுங்கவேர், பெருமருந்துவேர், நன்னாரிவேர், பொன்முசுட்டைவேர், கடுக்காய்வேர், முன்னைவேர், கோளுங்கொடிவேர், பாவட்டைவேர் இதுவெல்லாம் சமன்கூட்டி விளக்கெண் ணெயில் பிசைந்து சூரிய புடமாக வைத்து, பெரிய பிள்ளைகளுக்கு, பெரியமனுசாளுக்கு கொடுக்க வயிறு கழியும்.

வெக்கவேளை ஒருபிடி, பேய் மல்லிகை ஒருபிடி, மருக்காரை ஒருபிடி இது மூன்றும், ஆய்ந்து கொண்டு வந்து கருகாமல் பொன்நிறமாக வறுத்து அதிலே நாழித்தண்ணீரில் சுக்கு, மிளகு, அசமதாகமும் மூன்றும் சமனாகக் கூட்டிக்கொண்டு பொட்டணத்தில் மருந்து நேக அரைத்து அதை நீரில் கரைத்து சற்று சூடாகச் குடிக்கத்தீரும்.

| | |
|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் | ஒருசிறங்கை |
| ஈரவெங்காயச்சாறு | ஒருசிறங்கை |

அதிலே

| | |
|---|---|
| உள்ளி | வசம்பு |
| குருவிச்சங்கொழுந்து | கோழியவரைக்கொழுந்து |

இது சமனாகக் கூட்டி, நறுக்கிப்போட்டு, கொதிப்பித்துக் கொடுக்க வயிறு பொருமல் தீரும். வயிறு கழியும்.

## பிள்ளைகளுக்கு இரத்தக் கடுப்புக்கு

புளிய வேரில் மேல் தோல் சீவிப்போட்டு இழைத்து சாந்து போலே அரைத்து இரண்டு பாக்கு அளவு பசுவின் பால், தயிரில் கரைத்து மூன்றுநாள் கொடுக்க வயிறு கடுப்புத்தீரும்.

## பிள்ளைகளுக்கு வயிறு கழியும், கட்டுவிட

| | |
|---|---|
| அத்திவேர் | ஆவாரைவேர் |
| துடறிவேர் | மாவேர் |

உதயவேர் புளியவேர்
துவரைவேர் நெல்லிமுள்ளி
நற்சீரகம்

இதுவெல்லாம் ஓரளவாக அரைத்து எருமைத்தயிரில் அந்ததகரை பொட்டணங்கட்டி கூர வடித்துக்கொண்டு அதிலே அந்த மருந்துகளைக் குழப்பி உள்ளே தின்னக்கொடுக்க இரத்தக் கடுப்பும், சீதக்கடுப்பும் தீரும். மூன்று நாளைக்குக் கொடுக்கவும்.

### பிள்ளைகளுக்கு வயிற்றுக்கடுப்புக்கு மருந்து

ஆனாவேர் பானாவேர்
சிறுகிளாவேர் நன்னாரிவேர்
குட்டிவெல்லாவேர் குட் டி விளாவேர்
விடத்தகரைவேர் வில்லைவேர்
சங்கவேர் அப்பைக்கிழங்கு

இதுவெல்லாம் சமனாகக்கூட்டி, அரைத்து வைத்துக் கொண்டு மிளகு, வெங்காயம், சுக்கு, கடுக்காய், அசமதாகம், பெருங்காயம், கடுகு, திப்பிலி, உள்ளி, வசம்பு, கரப்பான் பட்டை, கருஞ்சீரகம், வெளிச்சப்பிசின், கஸ்தூரி மஞ்சள், கடுகுரோகணி, கிராம்பு, நாகப்பூ, அரத்தைக் கூடப்போட்டு, சித்தாமணக்கெண்ணெய் ஒருபடி விட்டு, கொதிக்கவைத்து மெழுகு பதத்தில் வடித்துக்கொண்டு மூன்றுநாளைக் கொருநாள் காசத்தனை உள்ளே பிள்ளைக்குக் கொடுக்க வயிறு கழிந்து போகும். பசியும் உண்டாகும். குடித்துச் செரிக்கும். ஒரு நசவும் வராது. எல்லாவற்றிற்கும் நல்லது.

### வேறு

துடரிவேர் இலவம்பிசின்
தான்றிக்காய் முக்கிளுவைவேர்
நெல்லிப்பருப்பு

இவை சமனாகக் கூட்டி அரைத்து எருமைத் தயிரிலே கொடுக்கக் கசப்புத்தீரும். அல்லது பெருமரத்தின் சிராயைத் துவைச்சுச் சாறு கொண்டு அதிலே

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| அசமதாகம் | |

அரைத்துக்கொண்டு கலந்து காய்ச்சி எருமைத்தயிரில் கலந்து கொடுக்க கடுப்புத் தீரும்.

### வேறு

| | |
|---|---|
| கடுக்காய் | கருப்பந்தண்டு |
| கீழ்க்காய் நெல்லி | நீர்முள்ளி |

சமனாகக் கொண்டுவந்து நறுக்கி இருநாழி தண்ணீரில் போட்டு நாழியாகக் காய்ச்சி பகல் எல்லாம் வெய்யிலிலே வைத்து ரவைக்கி உரியாகக் காய்ச்சி உண்டு, படுக்கும்பொழுது குடிக்கத் தீரும். இந்த மருந்து பெரிய மனுஷரும் குடிக்கலாம். வெள்ளுடம்பு கழிச்சல் தீரும்.

### பிள்ளைகளுக்கு வெள்ளுடம்பாகக் கழிந்தால் மருந்து

| | |
|---|---|
| தைவேளைவேர் | செங்கத்தாரிப்பட்டை |
| அப்பைக்கிழங்கு | கருஞ்சீரகம் |
| வசம்பு | வெற்றிலைக்காம்பு |

இது ஆறும் சமன்கூட்டி வேப்பெண்ணெயில் கொதிப்பித்து காதிலே குத்தி அடைக்கத் தீரும்.

o

### வேறு

ஆடாதொடை இலை இருபது கொண்டுவந்து வறுத்து, அதிலே இரண்டு காசெடை, நற்சீரகம் அரைத்துக் கரைத்து இரண்டு காசெடை முலைப்பாலில் கூட்டிக்கொடுக்கவும். இந்தப்படிக்கி பிள்ளைக்கித் தக்கதாக மருந்து சமன்கொடுக்க கூட்டி மூன்று நாளில் அந்த வெளுப்புத் தீரும்.

c

**பிள்ளைகளுக்குக் காதிலே சீழ் ஓடினால் அதுக்கு மருந்து**

பொரிசூரையும், நற்சீரகமும், ஈரவெங்காயமும் நறுக்கி முலைப்பாலில் கலந்து கட்டவும். அல்லது மன்னிவேர் சமூலமும், நற்சீரகமும், ஈரவெங்காயம், வசம்பு நறுக்கி முலைப்பாலில் சாறுகொண்டு புகட்டவும்.

**இனி நெய்வகை மருந்து**

| | |
|---|---|
| நாவல்கொழுந்து | துவரைக்கொழுந்து |
| துடறிக்கொழுந்து | நற்சீரகம் |
| சத்தை மிளகு | வெள்ள வெங்காயம் |
| வசம்பு | நாயுருவிவேர் |
| ஈர வெங்காயம் | |

இது சமன் கூட்டி பசுவின் நெய்யில் வேகவைத்து உள்ளுக்கும் கொடுத்து தலையிலும் தேய்க்கவும். சுழிக்கணமானால் தீரும்.

**இருமலுக்கு**

தூதுவளை இலை, கண்டங்கத்திரி இலை, கையான் தகரை, செம்முள்ளி இலை, திப்பிலி, பொடிசெய்து, சாதத்திலே மத்திச்சுப் போடவும். இருமல் நிற்கும்.

**பிள்ளைகளுக்கு பொருமலும், வெதுப்புக்கும் மருந்து**

உத்தாமணி இலை, தகரை இலை, நல்ல பீர்க்கி இலை ஒவ்வொரு பிடியும், அத்திப்பழுப்பு, அஞ்சு, சாளுக்கி இலை, நாலும், இதைக் கசக்கிச் சாறுகொண்டு வசம்பு, மூணு மிளகும் வெள்ளைப்பூண்டு, அசமதாகமும், ஆமையோடும் இதுகள் வறுத்து அரைத்துப் போடவும்.

**பிள்ளைக்கி மாந்த சுரத்துக்கு**

| | |
|---|---|
| ஆத்துமுள்ளிவேர் | குமிளவேர் |
| சித்தாமணக்குவேர் | கோழியாவாரைவேர் |
| உத்தாமணிவேர் | |

இந்த அஞ்சு வேரும் சமன்கூட்டி, வசம்பு கூட்டி இடித்துத் தூள்செய்து, மூன்றுவிரல் கொண்ட தூள்போட்டு, விளக்கெண்ணெயில் கொதிப்பித்து பதத்தில் இறக்கி உள்ளே கொடுக்கவும்.

### முலைப்பால் சுரக்க மருந்து

கழஞ்சு திப்பிலி அரைத்துப் பசுவின் பாலில் மூன்றுநாள் குடிக்க முலைப்பால் சுரக்கும். மாடப்புறா எச்சமும், கோழி எச்சமும் நீரிலரைத்து முலையில் பூச முலைப்பால் சுரக்கும்.

### சிறுபிள்ளைக்கு வயிறு கழிச்சல் நிற்க

வெள்ளைப்பூண்டு 1, சீரகம் 13, காசெடை, மாவயிரம் இந்த மூன்று மருந்தும் முலைப்பாலில் அரைத்து மூன்றுபொழுது கொடுக்க கழிச்சல் நிற்கும்.

### அக்கரக் காய்ச்சலுக்கு

வாயுதடு, நா அனலாயிருக்கும், பிடரிக்கும் முதுகெலும்புக்கும், கடுக்கும், காதிலே அனலா எரியும், ஈரலும் எரியும்.

### அதுக்கு மருந்து

பிரண்டை இலை1, காஞ்சொறி இலை, குறிஞ்சி இலை, குறிஞ்சி இலைப்பட்டை, ஈரவெங்காயம் 1, வசம்பு 1, விளக்கெண்ணெய், உழக்கும் மருந்து நரிக்கினது எலுமிச்சங்காய் அளவு எண்ணெயில் போட்டு பதத்தால் வடித்துக்கொண்டு காச்சதனை எண்ணெய் உச்சியிலும் கரத்திலும், முகத்திலும் தடவவும். பெரிய மனுஷருக்கு இரண்டு கரண்டியும், சின்னப் பிள்ளைக்கி அதுக்குத் தகுந்தவாறு எண்ணெயும் கொடுக்கவும்.

## பிள்ளை உதைக்கி மருந்து

செங்கத்தாரிப்பட்டை, தட்டிவந்த வெள்ள வெங்காயமும், வெற்றிலையும் கூடமென்று உச்சி, தொண்டைக்குழி, மூக்கு, வாய், சந்து இதுகளில் ஒவ்வொரு தானத்தில் நான்கு தடவை, ஆறுதடவை தடவவும். அந்த மென்ற சாத்திலே இரண்டு துளி வாயில் விழுக்காட்டவும். சகல பிணியுந் தீரும். கை கண்டது.

## பிள்ளைகளுக்குக் கடுப்பு கழிச்சலுக்கு மருந்து

அம்மான் பச்சரிசியும், கீழாநெல்லியும், சமன்கூட்டி அரைத்து முலைப்பாலில் கொடுக்க நிற்கும்.

## வேறு

மிளகு ஒருபிடியும், வெள்ள வெங்காயமும், அஞ்சு பூண்டும், நாலு வசம்பும், நிலவாகை, வேரிழைத்த பொடியில் உரிய பொடியும், செம்முள்ளியின் விழுது ஒரு பாக்களவும், முக்காபடி நல்லெண்ணெயில் கொதிக்கவைத்து பதத்திலிறக்கிக்கொண்டு உள்ளுக்கு ஒரு துட்டளவு சிலந்தி மேலும் உலர உலரப் பூசி வரவும். கடிகையும், விப்புருதியும் தீரும்.

**இதுக்குப்பத்தியம்:** உப்பு, புளி, கசப்புத் தவிர்க்கவும். முருங்கையிலை, இளங்கீரை, துவரம்பருப்பு, கூட்டிக் கொள்ளவும்.

## வேறு

நீர்க்கடுப்புக்கு தெத்தாவிரைச்சீத தின்ன நிற்கும்.

## பெரும்பாட்டுக்கு

நிலவாகைச்சுரம், மிளகு பலம் 5, ஒரு கைப்பிடி அகல கம்பளியில் கட்டி, சட்டியிலிட்டு எரியவிட்டு கம்பளி உருகுகிறபோது கடையவும். வெல்லம் போட்டு லேகியம் பண்ணிக்கொள்ளவும்.

## நிலவாகைச் சூரணம்

நிலவாகை நிழலில் உலர்த்தித் தூளாக்கி வைத்துக் கொண்டு சுரைப்பழுப்புச் சாற்றில் கொடுக்கவும். வயிற்று வலிக்கு குப்பைமேனிச் சாற்றில் கொடுக்கவும். நல்ல பாம்புக்கு, விரியனுக்குச் சாரணைச் சாற்றில் கொடுக்கவும்.

## எலிகடி குணம் மருந்து

***மாவுத்து*** என்னும் எலி கடித்தால் எப்போதும் போலே உள்ள வெதுப்பும், தலை சுழற்றி வீங்கும். வாய் நாறும்.

**இதுக்குமருந்து:** வாகை தோலும், வாகை விரையும் தேனிலரைத்துக் கொடுக்கத்தீரும்.

***உதிரமண்டலி*** என்னும் எலி கடித்தால் நீர் உதிரம் போலிருக்கும். கடிவாய் வட்டம் போலிருக்கும்.

**இதுக்கு மருந்து:** மஞ்சட்டியும், பற்பாடகமும் பொடிசெய்து தேனில் குழைத்துக் கொடுக்கத் தீரும்.

***அருகா*** என்னும் எலி கடித்தால் உடம்பு தடிப்பு உண்டாகும். ஈளை, இருமலுண்டாகும். முத்தக்காசு பொடி செய்து தேனில் குழப்பிக்கொடுக்கத் தீரும்.

***சூலகனென்னும்*** எலி கடித்தால் குளுந்து நடுங்கும்.

**இதற்கு மருந்து:** செஞ்சந்தனம், திப்பிலிப்பொடி செய்து தேனில் குழப்பிக் கொடுக்கத்தீரும்.

***மந்திரி*** எலி கடித்தால் தினவு தின்னும். பூனை சுறணை வேரும், கரவளை வேரும் பொடிசெய்து தேனில் குழப்பிக் கொடுக்கத் தீரும்.

***முத்தய்யன்*** எலி கடித்தால் உடம்பெரியும், வெதுப்புண்டாம். பாவட்டை இலை, ஊமத்தை இலை, மாடப்புறா எச்சம் அரைத்துக் கண்ணிலிடவும்.

விக்கன் எலி கடித்தால் உடம்பெல்லாம் ஓட வகைக்குப் பல விகாரமாம். செவிகேளாது. இதுக்கு கடுகுரோணி, கருவாழைப்பழம், கண்டங்கத்திரிக்காய் திண்ணத்தீரும். எலிகடிக்கு நெல்லிப்பட்டைப்பலம் 4, இருநாழி தண்ணீர் விட்டுக்காய்ச்சி நல்லெண்ணெய் விட்டுக் கொள்ள கடிதீரும். எலிகடிக்கு கருணைக்கிழங்குத் தூளும் குறுவை அரிசியுடன், வெள்ளாட்டுப்பாலில் சமைத்து உண்ண எலிகடி தீரும்.

வற்பங்கனென்னும் எலி கடித்தால் உடம்பு வீங்கும். கண்சிவந்து இருக்கும். சிறுக்கீரை வேர் தேனிலரைத்துக் கொடுக்கத் தீரும். திருவடி என்னும் எலி கடித்தால் உடம்பு வீங்கும். வெதுவெதுப்பும், புன்முருங்கை பொடிசெய்து தேனில் குழைத்துக் கொடுக்கவும், தீரும்.

**நிலவாகைக் கற்பம்**

நிலவாகைச் சமூலமும், உடனே பிடுங்கி உலர்த்திப் பொடிசெய்து, வெருகடிப் பிரமாணம் தேனில் கொள்ள மெத்தக்காந்தியாம். இளவெந்நீரில் கொள்ள திமிரிப்புக்கு விழும். நல்லெண்ணெயில் கொள்ள எலிகடி தீரும். சிறுவிஷக்கடிதீரும். எரி கிரந்தி தீரும். மோரில் குடிக்கச் செருமல் தீரும். கோமியத்தில் குடிக்க அளகுட்டந் தீரும். இவை சமன் கூட்டி இந்தச் சாறு விட்டரைத்து, நல்லெண்ணெய் ¾ படி, வேப்பெண்ணெய் ¾ படி, புங்கெண்ணெய் ¾ படி, குருந்த எண்ணெய் ½ படி, ஊமத்தை இலைச்சாறு இவை கூட்டி எரித்து வடித்துக் காப்புக்கட்டி வினாயக பூசை பண்ணிப் பூசி வேது வார்த்துக்கொள்ள வாதம் தீரும்.

**எரிகுன்மத்துக்கு**

வேப்பெண்ணெய் 4 படி, நல்லெண்ணெய் 4 படி, கவுதும்பைச்சாறு 3 படி, பசுவின்பால் 3 படி, ஏலம், அதிமதுரம், செங்களநீர், கோஷ்டம், செண்பகப்பூ, இவை

சமன்கூட்டி பால் விட்டரைத்து, எண்ணெய்ச் சட்டியில் விட்டு தண்ணீர், பால், நல்லெண்ணெய், நெய்படி இந்தச் சாறுவிட்டு, நாளொன்றுக்குக் கூட்டி எரித்து வடித்துக்கொள்ள எரிகுன்மம் தீரும்.

## பெரும்பாட்டுக்கு

நாவிலைக் கொழுந்தும், வரகரிசியும், அரைத்துக் களி கிண்டித் திண்ணவும். எண்ணெய் விட்டுத் திண்ணவும். சுண்ணாம்பும் எலுமிச்சம்பழச்சாறும், நல்லெண்ணெய், கருப்புக்கட்டி கூட்டித்திண்ணவும். பெரும்பாடு தீரும்.

## நஞ்சுக்கு மாத்து

பருத்திவிதை துவைத்து, பாலில் குடிக்க பதினெட்டு நஞ்சு தீரும்.

## ஆட்டுப்படுவனுக்கும், எலிப்படுவனுக்கும்

வேலிப்பருத்திவேர் இரண்டு கொட்டைப்பாக்களவு அரைத்து உரிய பச்சரிசியில் போட்டு பால்வார்த்து பொங்கி மூன்றுநாள் கொடுத்து ஏழுநாள் பத்தியம் காக்கவும். ○ பிரண்டைச்சாறும், நல்லெண்ணெயும் கலந்து ஒருகரண்டி போதக் கொடுக்கவும்.

## வண்டுகடிக்கு

வண்டு கடிக்கு சாரணைவேரை பசுவின்பாலில் அரைத்துக் கலந்து கொடுக்கத்தீரும்.

## பேய் நரிக்கடிக்கு

வடக்கே போகிற அழிஞ்சில்வேரை வெட்டி வந்து கொட்டைப்பாக்களவு அரைத்து வெள்ளாட்டுப் பாலில் கொடுக்கவும். மூன்றுநாளைக்குக் கொடுக்கவும். பேய் நரிக்கடி தீரும். உப்புப்புளி ஆகாது. மீறினால் குப்பைமேனி இலைச்சாறு நசியம் விடவும்.

## நஞ்சுக்கு மாத்து வகை

அரளிக்கு கடுக்காய்த் தண்ணீர், கார்த்திகைக் கிழங்குக்கு கடுக்காய்ப்பச்சை, நாவிக்கு மிளகுத் தண்ணீரில் கடுக்காய் அரைத்துக்கொடுக்கவும். வெள்ளை பாசாணத்துக்கு குட்டித் தக்காளிச்சாறு உள்ளுக்குக் கொடுக்கவும். கள்ளிப்பாலுக்கு கரணப்பொடியும், சாறுங்கொடுக்கவும். குண்டுமணி தின்றால் கரணப்பொடியும், மஞ்சள்பொடியும், அறுகுச் சாற்றில் கொடுக்கவும். எருக்கம்பால் குடித்தால் மோர் கொடுக்கவும்.

## நிலவாகைச் சூரணம்

நிலவாகைச் சமூலமும் பிடிங்கி நிழலில் உலர்த்தி இடித்துத் தூளாக்கி வடிகட்டி புதுக்கலசத்தில் அடைத்துக் கொண்டு தேனில் கொள்ள மெலியும். நெய்யில் கொள்ளப் பருக்கும். வெண்ணெயில் கொள்ள கீரைப்பாம்பு தீரும். மோரில்கொள்ள செரியாத் துன்பம் தீரும். கோமூத்திரத்தில் குடிக்க சிரங்கு தீரும். ஆட்டுக்கோமியத்தில் குடிக்க அழகு போம். எருமை மோருடன் குடிக்க எலிகடி தீரும்.

எருமைச்சாணகம் பிழிந்து குடிக்க பித்தகாசம் போகும். எருமைப் பாலில் குழைத்து விழுங்க விஷக்கடி தீரும். குப்பைமேனிச் சாற்றில் குழைத்துப் பூச தேளுக்கடி மீளும். வேப்பம்பட்டைச்சாற்றில் குடிக்கவும்.

## எலிகடிக்கு மருந்து

அமலென்னும் எலிகடித்தால் உடல்வெதும்பும், அழுகி விழும்.

**இதுக்கு மருந்து:** செங்களுநீர்க்கிழங்கை அரைத்துப் பாலும், தவசி முருங்கைச்சாறும் கூட்டிக்கொடுக்கவும்.

## விரியன் கடிக்கு

பேய்கொம்மட்டிக்காய் பத்துகாயைக் கீறி உப்புக் கீழும் மேலும் வைத்து ஊறவைத்து உப்புச் சாந்ததின் பிறகு காயவைத்துக் கொள்ளவும். விரியன் கடித்ததினால் ஒருபணஎடை அரைத்து இளவென்னீரில் கொடுக்க பேதியாகி விஷமும் தீரும். குளிச்சுப்போட்டு, சோறும் கொடுக்கவும். மறிபடும் வீக்கம் வாடும். சத்தே வீக்கம் இருந்தால் மேற்படி கொடியும் துவைத்து துவாலை போடவும். மூன்று நாளைக்கு போட வீக்கம் வாடும். ஆறுநாளைக்கு புளி, புகையிலை ஆகாது. வயிற்றுவலி எடுத்தால் காட்டுக்கருணைக்கிழங்கு அரைத்து விளவங்காய் அளவும், வேப்பெண்ணெயும் கூடப்போட்டுக் கலந்து கொடுக்கவும். வயிற்றுவலி நிற்கும்.

## சகல விஷத்துக்கு

அவுரிவேரை அரைத்து இளவென்னீரில் குடிக்கவும். பாம்பு விஷம் தீரும். கத்தடிவிரியனுக்கு வில்லைவேரை கரைத்து இளவென்னீரில் கொடுக்கத்தீரும். புல் விரியனுக்கு குறுஞ்சாவேரை அரைத்து இளவென்னீரில் கொடுக்கத்தீரும். மேலும் பூசவும்.

## கண்டகரு வளைக்கு

வேப்பம் விரை அரைத்து இளவென்னீரில் கொடுக்கவும். மேலும் பூசவும்.

## மண்ணுளிக்கு

சுண்ணாம்பு கரைத்துத் தெளியவைத்து இறுத்துக் கொடுக்கவும். மண்டியைப் பூசவும்.

புடையனுக்குப் பொன்முசுட்டைவேர் இள வெந்நீரில் அரைத்துக் கொடுத்துப் பூசவும்.

எரிமண்டலிக்கு நீர்பூலாவேர் பச்சைத் தண்ணியிலே அரைத்துக் கொடுத்துப் பூசவும்.

சீத மண்டலிக்கு வரப்பூலாவேரை அரைத்துக் கொடுத்துப் பூசவும். உதிர மண்டலிக்கு குமிளவேரை அரைத்துக் கொடுத்துப் பூசவும்.

கொம்பேறி மூக்கன் கடிக்கு தலை சுருளி வேர் குடித்துப் பூசவும்.

## மயக்குறாவுக்கு

முள்பிடாவேர் குடித்துப் பூசவும். சாணாங்கி மூக்கனுக்கு அனாவேர் குடித்துப்பூசவும். ஊது சுருட்டைக்கிக் கைக்கொடி வேர் குடித்துப்பூசவும்.

நெஞ்சுருட்டைக்கு கோழி அவரைவேர், குழைத்துப் பூசவும். சகல பாம்புக்கும், பாவட்டை வேரை அரைத்து இளவெண்ணீரில் கொடுக்கவும். பதினெட்டு பாம்பு விஷம் தீரும். எலுமிச்சம்வேர், இளவெந்நீரில கொடுக்கத்தீரும். இந்த மூன்று வேரும் குடித்துப்பூச, விஷமும் தீரும். நசியும் முருங்கை இலை, பாக இலை, வெற்றிலை, வசம்பு, மிளகு, வெங்காயம், நறுக்கி நசியம்விட சகல விஷமும் தீரும்.

சீந்திவிரை, மகிழவிரை, மிளகு, இலுப்பைப் பிண்ணாக்கு, முலைப்பாலில் விட்டு, அரைத்துக் கயறு பண்ணி முலைப்பாலிலிட சகல விஷமுந்தீரும்.

செய்யானுக்கு ஆத்தியிலை அரைத்து, கொடுக்க விஷம் தீரும். குண்டுமணி இலை அரைத்துப் பூசவுந்தீரும். சிறுசெய்யான் கடிக்கு அகத்தியிலையை துவைத்துச் சாறு குடிக்கவும்.

## நஞ்சுக்கு மாத்து

அழிஞ்சி இலைக்கும், அலரி இலைக்கும் கடுக்காய் அரைத்து வெண்ணெயில் மத்திச்சுக் கொடுக்கவும். கார்த்திகை

கிழங்குக்கு சுக்கை அரைத்து வெண்ணெயில் கொடுக்கவும். செங்கொட்டைக்கு பொரசம் பழுப்பு பிழிந்துக்கொடுக்கவும். எட்டிவிரைக்கு நாவல்பட்டை, நல்லெண்ணெயுடன் கொடுக்கவும். கற்பூரம் குடித்தால் கையாந்தகரைச்சாரைக் கொடுக்கவும். எருக்கம்பாலுக்கு அவுரிஇலை, ஊமத்தை இலைக்கு பசரியானது, தாமரை இலை கழனீரில் கொடுக்கவும். சிவதைவேருக்கு வேலாம்பட்டை, பச்சை நாவிக்கு சிறுகீரை, கொடுவேலி, சிறுகீரை, கழுதை வண்டுக்கு மிளகும், மஞ்சள் உப்பு இதுக்குத் தேத்தான் விரையும் மோரும், நறுவிளையிலைக்கும், பேய்ப்பீர்க்கும், முத்தக்காசு, பேய்க்கொமட்டி, நெல்லுவேர், நல்லெண்ணெய்க்கும், இலாமிச்சவேர், ஊமத்தவிரைக்கு எலுமிச்சம்பழம், இதுக்கெல்லாம் அனுபானம், பசுவின் வெண்ணெயாவது, பாலாவது, சர்க்கரையாவது கூட்டிக் கொள்ளவும்.

நேர்வாளக்கொட்டையை உரித்துப் பருப்பு எடுத்துக்கொண்டு பேய்க்கொமட்டிப் பழத்தில் ஊறவைத்து ரசத்தை வெற்றிலைச் சாறுவிட்டு முறித்து அதிலே விட்டு அரைத்து மாட்டுக்கொம்புச் சிமிழில் வைத்துக்கொண்டு அந்த மையை வெற்றிலையில் அரைபணவெடை வைத்து உள்ளுக்குக் கொடுக்கவும். தீரும். நல்ல பாம்பு, விரியன் எந்த விஷத்துக்கும், கண்கண்ட விஷத்துக்கும் கொடுக்கவும். தீரும்.

### பீனிசத்திற்கு சூத்திரி உசிதம்

| | |
|---|---|
| திரிபுகை | பெருமருந்துவேர் |
| பேய்முசுட்டைவேர் | எருக்கிலை மஞ்சள் |
| சுக்கு | திப்பிலி |
| முசல்புழுக்கை | மிளகு |
| வல்லாரை | பொன்னாங்காணி |
| துளசி | பிரமி |

ஆக வகைக்கு அரைக்கால் படியாக பிழிந்து, மெழுகு பதத்தில் வடித்துக்கொண்டு, குழந்தைகளுக்கு ஒரு

கரண்டியயாகக் கொடுத்து வரவும். அதுக்கு இரண்டு தடவையாகக் கொடுத்துவரவும்.

**தீரும் வியாதி:** கணை18, வயிற்றுவலி, கணம் 10க்கும், வலிப்பு, பக்கவாதம் கைகால் குடைச்சல் ஆக இவ்வளவு வியாதி தீரும்.

### கணைக்கு

கீழ்க்காய் நெல்லி ஒரு பிடி, கருவேலம்பட்டை ஒருபிடி, வெங்காயம் ஒருபிடி ஆக சாறு படி 4ல் விளக்கெண்ணெய் விட்டுக்காய்ச்சி ஒரு கரண்டியாகக் கொடுக்கவும்.

### குழந்தைக்கு பேதி நிற்க

புளியாரையும், வாழைப்பூவும் ஒன்றாய்ச் சேர்த்து, புட்டவியலாக அவித்துப் பிழிந்து தேன் ஊற்றிக் கொடுக்கவும். பேதி நிற்கும்.

### பிள்ளைகட்கும், குழந்தைகட்கும் மாதளை நெய்

மாதளைச் சமூலமும், அமுர்த சர்க்கரைச் சேர்த்து, இடித்துக் குழம்பாக்கி, ஆவின் வெண்ணெய் கூடச்சேர்த்து, சாதிக்காய், பத்திரி, ஏலரிசி ஆகப் பொடித்துப் போட்டுக் கிண்டிக் காய்ச்சி, மெழுகுப் பதத்திலிறக்கிக் கொண்டு பூசை செய்து வைத்துக்கொண்டு பிள்ளைகட்குக் கரண்டி வீதம் கொடுக்கவும்.

கணை 18, தோஷம் போகும். வயிற்றிரைச்சல் சலக்கழிச்சல் தீரும்.

### பிள்ளைகளுக்கு துட்டெண்ணெய்

| | |
|---|---|
| மிளகு | சுக்கு |
| திப்பிலி | ஓமம் |

காயம் மஞ்சள்
வசம்பு பூண்டு
அரத்தை

ஆக இவ்வளவும் வகைக்குப் படி சேர்த்துத் தட்டி தூள் பண்ணி வைத்து, கொக்கு, வேப்பெண்ணெய் அரைக்கால் படியில் , மேற்படி பொடியைப் போட்டுக் கிண்டி வேலிப்பருத்திவேர், கொளுஞ்சிவேர், தைவேளைவேர், நிலவேர் சமனெடையாகச் சேர்த்துத் தட்டி, மேற்படி எண்ணெயில் போட்டுக் காய்ச்சிப் பதத்தில் இறக்கிவைத்துக் கொண்டு, பிள்ளைகளுக்கு (½) யாகவும், சிறுபிள்ளை களுக்குக் குறைத்தும் கொடுக்கவும்.

***பத்தியம்:*** புளி ஆகாது.

**குழந்தை மாந்தத்துக்கும், பொருமலுக்கும் துட்டெண்ணெய்**

வசம்பு சுக்கு
மிளகு திப்பிலி
மஞ்சள் வேப்பம்பட்டை
முருங்கைப்பட்டை சாரணைவேர்
தைவேளைவேர் கொழுஞ்சிவேர்
வெள்ளாட்டுத்தோல்

ஓர் நிறையாக தூள்செய்து, வேலிப்பருத்திச் சாற்றை சீலையிலூட்டி, காயவைத்து முன் மருந்தை இடித்துத் தூள்பண்ணி, திரித்துருட்டிகருதில் சேர்த்து விளக்கெண்ணெய் விட்டு சுடர்மூன்று வடித்து வைத்துக்கொண்டு அரை துட்டெடைக் கொடுக்கவும்.

**பிரளி, காங்கை, உள்வாஞ்சை, எலும்புருகிக்கு**

வடக்கே போகிற அத்திவேரில் வெட்டி அதின் கீழ் புதுக்கலசம் வைத்தால் செலம் இறங்கும். அதை எடுத்து வைத்துக்கொண்டு தினசரி...... ஆக சாப்பிட்டு வரவும்.

## அண்டவாதம்

மளுங்காரம் பட்டைதட்டி, சிறுநீர் விட்டு வறுத்து விதையில் மூன்றுநாள் கட்டவும் தீரும். உள்ளுக்கு முருங்கைப்பட்டையைத் தட்டிப் பிழிந்து இரண்டு காசிடை உள்ளுக்குக் கொடுக்கவுந் தீரும். நாயுருவிச் சமூலம், காத்தொட்டிவேர் பலம் 1, மிளகு 1, வெங்காயம் ஆக அரைத்துச் சாப்பிடத் தீரும்.

## சாறணைச் சூரணம்

சாறணைவேர் 2 பலம் வில்லையாய் நறுக்கி வெள்ளாட்டுப் பாலிலூட்டி வெதும்ப வைத்து துணி நிழலுணர்த்திச் சூரணம் செய்து திப்பிலி பொடி 6 பலம் சேர்த்து இஞ்சிச்சாறு விட்டு குழம்பாக்கி சீனி 1 பலம் சேர்த்து தினசரி சாப்பிட்டுவரத் தீரும்.

## வியாதிக்கு விபரம்

வாய்வு, குன்மம், மேகம், சூலை, வாதம், பொருத்து குத்துலைச்சல் பாண்டுந் தீரும்.

## பேதிக்கு எண்ணெய்

| | |
|---|---|
| முசுட்டைத்தண்டு | கத்தாளஞ்சருகு |
| பிரமி | நிலவாகை |
| கடுக்காய் | களிப்பாக்கு |
| கடுகுரோகணி | |

வகைக்கு ½ பலம், இரண்டு படி தண்ணீர் விட்டு வற்றவைத்து ¼ மாகாணி விளக்கெண்ணெய் விட்டுக் கொடுக்கவும். வெள்ளைக் குந்துருக்கங் கொண்டுவந்து சதிரக்கள்ளியில் குடைந்து 15நாள் வைத்தெடுத்து அரளிப்பூப்பந்து கட்டி மேற்படி மருந்தை நுனிக்கி நெருப்பில் தூவி மேற்படி பந்தை புகையின்மேல் பிடித்து வைத்துக் கொண்டு முகர்ந்து பார்த்தால் பேதியாகும். பேதி அதிகமாக

வேணுமானால் அதிகம் முகர்ந்தால் அதிகப்பேதி. கொஞ்சம் முகர்ந்தால் கொஞ்சம் பேதியாகும்.

### சுக பேதிக்கு

புரசன் விதையை குடத்தின் கீழ் சகதியில் புதைத்து வைத்து 90 நாளுக்கு மேலெடுத்து, உள்முனை போக்கி பசுவின்பாலில் அரைத்துக் காலமே சாப்பிடவும். பேதியாகும். கிருமி விழும். மேகந்தீரும். அதிகப்பேதி கண்டால் உப்புப் போட்டு சாப்பிடவும்.

***பத்தியம்:*** புளி, புகையிலைத் தள்ளவும்.

### கிருமிக்கு

கொன்றைக் கொழுந்தை உப்பில்லாது அவித்துண்ண மறுநாள் கிருமியெல்லாங் கூட்டோடே விழும்.

### திருவளையடைத்தான்

| | |
|---|---|
| சாதிக்காய்பத்திரி | அதிவிடயம் |
| குரோசாணி ஓமம் | சன்னலவங்கப்பட்டை |
| மாயக்கா | |

வகைக்கு வராகன் 3, முலைப்பாலில் ஊறப்போட்டு வறுத்துச் சூரணஞ் செய்துகொண்டு அந்த எடைக்கு பூனாகச் சூரணஞ் செய்து முன் சூரணத்தில் சேர்த்து வெருகடிச் சூரணமும், அதிற்பாதிச் சீனியும் உடனுக்குடனே கலந்து சாப்பிடவும். புளி, புகையிலைத் தள்ளவும். அபானத்தைச் சேர்ந்த உஷ்ணவாய்வு, கிராணி, அதிசார வாய்வு, வெப்பு உஷ்ணம், அன்னத்துவேசம், வாய்வுந்தீரும். அதனால் வரும் சுரதாபமுந் தீரும். சுள்ளு அரக்கு உண்டோர்க்கு இம்மருந்து ஏற்காது.

## சோகை பாண்டு

நீர்முள்ளி இலையை அவித்து மஞ்சள், உள்ளி, கடுகு, அவித்த தண்ணீர்விட்டரைத்து மேற்படி கீரையில் கலக்கி கடைந்து மெழுகுப் பதத்தில் கிண்டி இந்தப்படி ஏழுபொழுது செய்து சாப்பிடவும். புளி, புகையிலைத் தவிர்க்கவும்.

## சோகைக்கு

மாவிலங்கை குலையை கை தவளையில் துட்டு அகலத்தில் தட்டிவைத்து அதில் தூத்துக்குடி சல்லி வைத்துக் கட்டி அவிழ்த்து நல்லெண்ணெய் போட்டால், புண்ணும், மஞ்சள் காரம் போட்டு ஆக்கிக்கொள்ளவும். பூருவ பட்சத்துக்கு வலது கையும் அமரபட்சத்துக்கு இடதுகையும் கட்டத்தீரும்.

நீர்முள்ளி, நாயுருவி, பனங்கதிர், புளியந்தோடு பலம் வீதம் சாம்பலெடுத்து வைத்துக்கொண்டு அஞ்சாகப் பகுத்து கண்டங்கத்திரி, பிராமியிலை, முள்ளியிலை ஆக வகை வீதம் போட்டுக் கஷாயம் செய்து வைத்துக்கொண்டு பொரிகாரஞ் சுத்தி பண்ணி பொரித்து சுக்கு, மிளகு, பூண்டு, விராகன் நேர்வாளஞ் சுத்தி பண்ணி முளைபோக்கி ஒரு போதைக்கு அரைய பருப்புக் கூட்டி, அரைத்து ஓவருப்பு போட்டு விளக்கெண்ணெய் விட்டு கலக்கிக் கொடுக்கவும். பத்தியம் உப்பாகாது.

## கால், கை வீக்கத்துக்கு

| | |
|---|---|
| கையான்தகரை | நெருஞ்சிவேர் |
| சங்கம்வேர்ப்பட்டை | நீர்முள்ளி இலை |

இரண்டு பலம் மிளகு அரைப்பலம் பொட்டணமாகக் கட்டி ஆறுபடி ஜலம்விட்டு, மருந்துபோட்டு இரண்டு படியாக வற்றவைத்து நாள் ஒன்றுக்கு இரண்டு பொழுதாக மூன்றுநாள் கொடுக்கவும்.

### சூரிவேர் கிராணிக்கு

சூரிவேர் அரைத்து ஆவின்பால் சேர்த்துக் கசக்கிச் சாறு இட வியாதி தீரும். உடம்புக்கு வலு, பிசாசு விலகும், கிராணி, கழிச்சல் போகும்.

### கொடுப்பை, மேகம், வெட்டை, சிரங்கு

கொடுப்பைச் சமூலம் அரைத்து மிளகு, சீரகம் சேர்த்து அரைத்து நறுநெய்யில் வறுத்திறுத்துக்கொண்டு சாப்பிடத் தீரும்.

**தீரும் வியாதி:** மேகம், வெட்டை, சொறி, சிரங்கு தீரும்.

### வயற்றலைச்சல் கிராணிக்கு

வெள்நாகல்பட்டை நிழலுலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு வெள்ளாட்டுப்பாலில் வெருகடிப் போட்டு கொடுக்கவும்.

### கிராணிக்கு

| | |
|---|---|
| மிளகு | கொடுவேலிவேர் |
| வளகிலுப்பு | திப்பிலி |
| நடுக்குமூலம் | கடுகு |
| சிறுதேக்கு | வாய்விளங்கம் |
| ஓமம் | சுக்கு |
| நவச்சாரம் | |

ஆக வகைக்கு வராகன் 1, மேல்கண்ட நவச்சாரமும், வளகில் உப்பும், வராகன் ¼, தாமைரைக்கிழங்கு பலம் 5, இவ்வளவும் இளவறுப்பாக வறுத்த வஷ்த்திரகாயம் செய்து எருமைத்தயிரிலாவது வெருகடிப்பிரமாணம் போட்டு 7நாள் பதினான்கு பொழுது சாப்பிடவும். தீரும்.

## வயற்றளச்சலுக்கு

எலுமிச்சம்பழத்தைத் துளைத்து சாதிக்காயை வைத்து மேல் சாணி பொதிந்து எருவில் புடம்போட்டு எடுத்து மேற்படி சாதிக்காயை பெரிய மனுசாளுக்கு மூன்று பங்காகவும், பிள்ளைகளுக்கு நாலு பங்காகவும் பொடித்து எருமை வெண்ணெயில் சேர்த்துக் கொடுக்கத் தீரும்.

## இருமலுக்கு எண்ணெய்

| | |
|---|---|
| கஸ்தூரிமஞ்சள் 1 பலம் | கசகசா ½ பலம் |
| கோட்டம் ½ பலம் | மிளகு ½ பலம் |
| சீரகம் ½ பலம் | கையான்தகரைச்சாறு 1 படி |
| கொடுப்பைச்சாறு 1 படி | கீழ்க்காய் நெல்லிச்சாறு 1 படி |
| மொசுமொசுக்கைச்சாறு1 படி | நெல்லிகாய்ச்சாறு 1 படி |
| செவ்விளநீர் 1 படி | |

மேற்படி சாறு படிகளில் மேற்படி மருந்துகளை அரைத்து மேற்படி சாற்றில் கலக்கி ஒருபடி நல்லெண்ணெய் சேர்த்துக்காய்ச்சி எண்ணெய்ப் பருவத்தில் வடித்து முழுகிவர உத்தமம். முழுகின மறுநாள் குளிர்ந்த நீரில் குளிக்கவும்.

***பத்தியம்:*** முழுகின அன்று புளி புகையிலைத் தள்ளவும். உத்தமம்.

## தொண்டை புகைச்சல், இளைப்புக்கு

| | |
|---|---|
| திரிகடுகு | 3 வராகன் |
| அக்கார | 3 வராகன் |
| அரத்தை | 3 வராகன் |
| வெள்ளைக்குந்துருக்கம் | 3வராகன் |
| நெல்பொரி | ,, |
| ஆடாதொடை | ,, |
| நெல்லிக்கொத்து | 3 வராகன் |
| தேன்கழஞ்சி | 6 |

இதுவெல்லாம் கூட்டிக் குழம்பாக்கி அந்தி சந்தி வைத்து 10 நாள் நக்கவும்.

## இருமலுக்குக் கிருதம்

பசுநெய் ¾ படி குட்டித்தக்காளி 1 பிடி
தூதுவளை இலை 1 பிடி கண்டங்கத்திரி இலை 1 பிடி

நெய்யில் போட்டுக் காய்ச்சி இலை வெந்த பருவத்தில் நெய்யை இறக்கும்பொழுது,

மிளகு
திப்பிலி
சுக்கு
அகாரா
சித்தரத்தை
கடுக்காய்
அதிமதுரம்
மாதுளந்தோடு
கூகநீரு இலைவேறு

ஆக இவ்வளவும் வகைக்கு 1 வராகன் வீதம் பச்சையாக நுனுக்கிக் கொள்ளவும்.

நிலவேரை வறுத்துப் பொடித்து பண்ணிக்கொண்டு மறுகலசத்தில் போட்டு நெய்யை வடித்து மேற்படி இலையை நன்றாக மத்தித்து நெய்மருந்துடனே சேர்த்துக் கிண்டி வைத்துக்கொண்டு அந்தி சந்தி அரைமாகாணி படி சாப்பிட்டு வரவும்.

**தீரும் வியாதி:** ஈழை, இருமல், புகைச்சல், இளைப்பு முதலியன.

## தூரத்தலுக்கு இஞ்சிக் குழம்பு

சுக்கு
அதிமதுரம்
மிளகு
மல்லி
திப்பிலி
வாய்விளங்கம்
நெல்லிக்காய்
இலவங்கம்
கடுக்காய்
சாதிப்பத்திரி
சீரகம்
தாளிசபத்திரி
கருஞ்சீரகம்
இலவங்கப்பத்திரி
நாகப்பூ
வழலையரிசி
சந்தனக்கட்டை
வெட்பாலையரிசி
கோட்டம்
செண்பகமொட்டு

| | |
|---|---|
| பூலாங்கிழங்கு | மஞ்சள் |
| சாதிக்காய் | கடுகு |
| கிராம்பு | மகரப்பூ |
| சடாமாஞ்சி | தக்கோலம் |
| பரங்கிப்பட்டை | சதகுப்பை |
| சிவதை | மஞ்சள் |
| ஓமம் | கடுகு |
| மகரப்பூ | தக்கோலம் |

ஆக வகைக்கு 1 வராகன் சேர்த்து இடித்து வச்சிரகாயம் செய்து வைத்துக்கொண்டு இஞ்சி 5 பலம் இடித்துச் சாறு எடுத்துக் கொண்டு சர்க்கரை 5 பலம் மேற்படி சாற்றில் கரைத்துப் பாகு செய்து மேற்படி பொடியைத் தூவிக்கிண்டி இறக்கி ½ படிவிட்டுக் கிளறி தேன் ¼ படி விட்டு கிளறி வைத்துக்கொண்டு காலை, மாலை நெல்லிக்காயளவு சாப்பிடத் தீரும்.

## இருமலுக்குப் புகை

| | |
|---|---|
| சாம்பிராணி | மஞ்சள் |
| சுக்கு | வால்மிளகு |

சமனாகக் கூட்டி கவுதும்பைச் சாற்றில் அரைத்து வில்லை செய்து காயவைத்து ஒருவில்லை எடுத்துப் பொடித்துப் புகைக்கக் குடிக்கவும். மந்தாரகாசம் கணை முதல் புகைச்சலுந்தீரும். 3 நாள் குடிக்கவும். புளி, புகையிலைத் தள்ளவும்.

## யுனானி வைத்தியம்

செம்பருத்தம்பூ ஒரு சாடியில் ஒருவிரல் கணம் பரப்பி பனங்கற்கண்டு பொடித் தூவி மேலும் பூவை பரப்பி அதின்மேல் பொடியை இட்டடியாக நிரம்பும்வரைப் போட்டு வைத்துச் சூரியபுடமாக ஒருவாரம் வைத்து எடுத்து காலை, மாலை நெல்லிக்காயளவு சாப்பிடவும்.

சாப்பிடுகிறபோது பழைய சாதமும், நல்லெண்ணெயு மாகாது, அரைமண்டலம் சாப்பிடவும். பத்தியமில்லை.

**தீரும் நோய்கள்:** மேகம், க்ஷயம், இருமல், குருதிக்குழற் அழற்சி முதலியவை குணமாகும்.

**பவுத்திரத்துக்கு**

கார்த்திகைக் கிழங்கை உமிழ்நீரில் உரைத்துப் போடவும். பவுத்திரஞ் சகலமும் தீரும். மேற்படி மணிதங்கி இலையும், பச்சைக் கஞ்சா இலையும் வதக்கி நாலுநாள் கட்டத் தீரும். ஆவாரை பிசுக்கொட்டுகிற கொழுந்தும், பூவும், எலுமிச்சங்காயளவு அரைத்து மாகாணி படி நல்லெண்ணெயில் குழப்பி காலமே ஒரு போது உள்ளுக்கு மூன்றுநாள், மூன்று பொழுது சாப்பிடவும். தீரும்.

**விஷம், குட்டம் தீரும்**

சங்கங்குப்பி இலைச்சாறு ¼படி, ஈரவெங்காயம் 1பலம், கூடச்சேர்த்து இடித்துப் பசுவின் பாலில் ¼படி கலந்து 5 பொழுது சாப்பிடவும். பத்தியம், உப்பு ஆகாது. மறுபத்தியம், உப்பு வறுத்துக் கூட்டவும். ஒன்பதாம் நாள் ஓமம் அரைத்துக் கொதிக்கவைத்து முழுகவும். 11-வது நாள் இசுங்கி இலையும், மஞ்சளும் ஓமமும் அரைத்து நல்லெண்ணெயில் காய்ச்சி முழுகவும் தீரும்.

**குட்டத்துக்கு**

| | |
|---|---|
| சந்தனம் | தேவதாரம் |
| கச்சோலம் | பூலாவிருச்சம் |
| கஸ்தூரி மஞ்சள் | கார்கோலரிசி |

ஆக வகைக்கு நல்லெண்ணெய் 1 படி, பால் 1படி, மேற்படி மருந்தை பால் விட்டரைத்து எண்ணெயில் கலக்கி மெழுகு பதத்தில் வடித்துக் கொண்டு முழுகவும். குட்டம் 18 சூலையும் தீரும்.

**சிரங்குமுதல் , சகல விஷம், சகல நீருந் தீரும்**

முள்குறண்டிவேரை அரைத்துப் பசுவின்பாலில் கரைத்துச் சாப்பிடவும். இப்படி 3 நாள் சாப்பிடவும். உப்பாகாது. மறுபத்தியம் உப்பை வறுத்துக் கூட்டிக் கொள்ளவும். சிரங்கு, கரப்பான், விஷநீர்களுந் தீரும்.

**ஈழை, தேமல் தளுவத்துக்குச் சொரி சிரங்குச் சூரணம்**

பொன்னாவரை மூலம் நிழலுலர்த்திச் சூரணித்து வைத்துக்கொண்டு, தேனில் சேர்த்துச் சாப்பிடத்தீரும்.

**தலைக்குட்டத்துக்கு**

வசம்பு, கிலுகிலுப்பை இரண்டையும் அரைத்து நல்லெண்ணெயில் கலக்கி மெழுகு பருவத்தில் இறக்கி வைத்துக்கொண்டு தலைக்கிட்டு இலுப்பைப் புண்ணாக்கு தேய்த்து முழுகவும். தீரும்.

அஞ்சு ஊமத்தங்காயையும், இரண்டு கழஞ்சிரசம், அஞ்சு கழஞ்சி, கெந்தகம் அரைத்து ஊமத்தங்காயை அறுத்து, கெந்தகத்தை செலுத்தி மேல்மூடி நார் கொண்டு சுத்தி கட்டிப் பசுவின் சாணி கொண்டு ஷெ காயை பொதிந்து ஏழு எருவில்ப் புடம் போட்டு எடுத்து அரைத்து ஷெ ரசம் விட்டு, அரைத்து உருண்டை செய்து நிழலுலர்த்தி வைத்துக்கொண்டு பசுவின் வெண்ணெய், தேங்காய் எண்ணெய், நல்லெண்ணெய் இதில் ஏதாவது கூட ஷெ உருண்டையைப் பொடி பண்ணி எண்ணெயில் போட்டு, ரேசித்துவைத்துக்கொண்டு புண்ணில் போடவும்.

**மேகத்துக்கு**

பூனைக்கண் குந்துருக்கத்தை நன்றாய் நுனிக்கி, சிலத்தில் போட்டு, நல்லெண்ணெயும் கூடவிட்டு, தயிர் மத்தாலே நன்றாய்க் கடைந்து எடுத்துவைத்துக்கொண்டு ஒரு புண்ணைக்காயளவு உள்ளுக்குக் கொடுக்கவும். பத்தியம், புளி தள்ளவும்.

## நீர்க்கடுப்புக்கு கல்லடைப்பு

| | |
|---|---|
| ஏலம் | சீரகம் |
| இருவேலிகொடுப்பை | அதிமதுரம் |
| ஆலம்விழுது | நுனாக்கொழுந்து |
| மலாக்காச் சந்தனம் | மல்லி |

ஆக வகைக்கு 2 பலம் எடுத்து, பசுவின்பாலில் அரைத்து ஷை பாலில் கலக்கிச் சாப்பிடவும். பத்தியம், புளி ஆகாது.

## மேக காங்கை, கபால வாய்வு, சொரி சிரங்குக்கு

| | |
|---|---|
| கஸ்தூரி மஞ்சள் | 1 பலம் |
| கருஞ்சீரகம் | ,, |
| மாயக்கா | ,, |
| ஏலம் | ,, |
| சந்தனம் | ,, |
| வால்மிளகு | 1 பலம் |
| கருஞ்சித்தகத்திப்பூ | 5 பலம் |
| சாதிக்காய் | ½ பலம் |
| எலுமிச்சம்பழச்சாறு | ½படி |
| கொடுப்பைச்சாறு | ½படி |
| கரிப்பான் சாறு | ½படி |

ஷை சாறுவிட்டு கடை மருந்து அரைத்து நல்லெண்ணெய் 1½ படி விட்டுக் காய்ச்சிப் பதத்தில் இறக்கிக் கொண்டு கணபதி பூசை செய்து வைத்துக்கொண்டு முழுகவும். பத்தியம், புளி ஆகாது.

## ஆறாப்புண்ணுக்கு, மேக ஊறலுக்கு

விளக்கெண்ணெய் அரைக்கால் படி
ஊமத்தைச்சாறு அரைக்கால் படி
துருசு 8 வராகன்

நுனிக்கிப்போட்டு, காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு போடவும். தீரும்.

நிலவாகை ¼படி, சீரகம் அரைக்கால் படி, கற்கடக சிங்கி ½ பலம், பிஞ்சுக்கடுக்காய் ½ பலம், இந்துப்பு ¾வராகன், கடைச்சரக்கை இளவறுப்பாக வறுத்துப் பொடி செய்து வைத்துக்கொண்டு சீனி 1 பலம், கூடக்கூட்டி சாப்பிட்டு வரவும். பத்தியம் இல்லை. சிரங்கு, கிருமி, குட்டம் தீரும்.

**அருகன்வேர் கஷாயம் (தாதுபுஷ்டி உண்டாம்)**

அருகன்வேர் 1 பலம், மிளகு 108, சீரகம் 3 பலம் ஆக வகை மூன்றும் தட்டி மூன்றுபடி ஜலம்விட்டு, கஷாயஞ் செய்து முக்கால்படியாக வற்றவைத்து ஆவின் வெண்ணெய் நெல்லிப்பிரமாணம் போட்டு சாப்பிடவும்.

***தீரும் வியாதிகள்:*** உஷ்ணமேகம் போகும். கண் குளிரும், தாதுபுஷ்டி உண்டாகும்.

**பாரிச வாய்வுக்கு, புழு வெட்டுக்கு**

சேங்கொட்டை தைலத்தை முதுகில் கைப்பட்டைக்குக் கீழ் இரண்டுபுறமும் வட்டமாய் சன்னமாக கீறவும். புண்ணாகித் தீரும். கழற்சி இலைச்சாறும், மிளகு 2 கழஞ்சு, வெள்ளைப்பூண்டு 2, கழற்சியிலை சாற்றிலரைத்து தயிரில் கலக்கிச் சாப்பிடத் தீரும். எருமை வெண்ணெயும், எருக்கம்பாலும் மத்தித்துத் தேய்க்க மயிர் முளைக்கும்.

**வாய்வுக்கு, வாய்வு வயிற்றுவலிக்கு**

| | |
|---|---|
| இந்துப்பு | ஓட்டுப்பு |
| வளையலுப்பு | கல்லுப்பு |
| உப்பு | |

ஆக ஐந்தும் வகைக்கு குப்பைமேனிச்சாறு விட்டரைத்து, குகை போலப் பண்ணி ரசம் 1 வராகன் விட்டு, சட்டிக்குள் வைத்து மேல்சட்டி மூடி சீலைமண் செய்து அடுப்பில் வைத்து, இரண்டு சாமம் கமலாக்கினியாக எரித்து

இறக்கி ஆறவிட்டெடுத்து, சுக்குப்பொடி, வெருகடி உப்பு, நாலு பணவெடை சேர்த்து சாப்பிடவும். பத்தியம், புளி ஆகாது.கல்லுப்பு, வெடி உப்பு, இந்துப்பு, வளகிலுப்பு, கரியுப்பு ஆக உப்பு ஐந்தும், கையாந்தகரைச் சாறு விட்டரைத்து வில்லைத்தட்டி காயவைத்து, எருக்கினிலைப் பரப்பி அதன்மேல் பிரண்டைப் பொடியைப்போட்டு மேலோடு மூடி மேல்எரு போட்டு புடம் போட்டு, எடுத்துக்கொண்டு உதயம் சாயந்திரம் சாப்பிடவும் தீரும்.

### தீராத வயிற்று வலிக்கு

வேப்பிலையும், உப்பும் சட்டியில் போட்டு கருக்கிக்கொட்டிப்போட்டு, விளக்கெண்ணெய் ஒருகரண்டி விட்டு இந்துப்பு ஒருகழஞ்சு, நுனிக்கிப்போட்டு, இரண்டு ஈருள்ளி நொடிஞ்சு போட்டு, காய்ச்சி வடித்துப்போட்டு, மூன்றுபடி, மூன்றுநாள் கொடுக்கவும். வயிற்றுவலி தீரும்.

### பவுத்திரத்துக்கு

மேனியைச் சமூலம் நிழலுலர்த்தலாக உலர்த்திச் சூரணஞ்செய்து ஒரு வெடிகடிப்பிரமாணம் வெண்ணெயில் சேர்த்து ஒரு மண்டலம் சாப்பிடத் தீரும்.

### சுரத்துக்குக் கஷாயம்

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| சித்தரத்தை | நருக்குமூலம் |
| பேய்ப்புடல் | செவ்வியம் |
| சிறுதேக்கு | வாய்விளங்கம் |
| மல்லி | பற்படகப்புல்லு |

ஆக வகைக்கு 1 வராகன்,

| | |
|---|---|
| கணுப்பூண்டு | வெதுப்படக்கி |
| துளசி | |

ஆக வகைக்குச் சமூலம் 3 பலம், சித்திரமூலம் ½வராகன், கண்டங்கண்டமாக நறுக்கி 3 படி தண்ணீர் விட்டு, அடகுடினீயாகப் போட்டு, மூன்று பொழுது சாப்பிடவும். உப்பாகாது.

### நாலாமுறை சுரத்துக்கு

வெற்றிலை 3, மிளகு 10, அரைத்து உருட்டி 25 படி நொச்சியிலை இடித்து புட்டவியலுக்குள்ளே வைத்து வெந்து, மேல்படி மருந்தை எடுத்துக்கொண்டு பிழிந்து உள்ளே வைத்த மருந்தைக் கலக்கிச் சாப்பிடவும். சுரம் நிற்கும்.

### முசல் வலிக்கு

குக்கல் விட்டை, சிறு தும்பையிலையும் கசக்கி கண்ணில் பிழியவும். நாயினுடைய வீரப்பல்லும், கழுதைப்பாலும் அரைத்து மூன்று பொழுது கொடுக்கவும் தீரும்.

### தாது உண்டாக

சுக்கு
கசகசா
முருங்கைப்பூ
கஞ்சா
கிராம்பு
சாதிக்காய்
கருப்புக்கட்டி

இவ்வளவும் பாலில் பொடித்துச் சாப்பிடவும். தாது உண்டாம்.

முருங்கைப்பூ 4 படி
பசுவின்பால் 4 படி

அடுப்பில் வைத்து தீ எரித்து முருங்கைப்பூ வெந்ததின் பேரில் பிசைந்து சக்கையைப் போட்டு

சாதிக்காய்ப்பத்திரி
லவங்கப்பட்டை
லவங்கம்
குரோசாணி

வகைக்கு 1 வராகன் கூட்டி சூரணஞ்செய்து வைத்துக்கொண்டு சர்க்கரை 5 பலம் போட்டு, பாகு செய்து மேற்படி சூரணப் பொடியைப் போட்டு, லேகிய பதமாக்கி தேன்விட்டுக் கிண்டிவைத்துக்கொண்டு, இரண்டு நேரமும் சாப்பிடவும். இந்திரியம் உண்டாகும். இச்சாப்பத்தியம்.

### திரேகத்தில் உதிரமுண்டாக

கோதுமை அரிசி குருணைபடி-1, சட்டியில் பசுவின் பால் 1 படி தெளித்து துவாதுவாக கிண்டினதின் பிற்பாடு நெய் ¾ படி விட்டு பிரள பிரளக் கிண்டி, அதின் பேரில் 1 படி பால் விட்டு நன்றாய் வெந்து வருகிறபோது சீனி 5 பலம் போட்டுக் கிண்டி இறக்கிவைத்துக்கொண்டு உதயம் சாயந்திரம் ஒரு எலுமிச்சங்காயளவு சாப்பிட்டுவரவும். திரேக சவுக்கியம் உண்டாம்.

### மாலைக்கண்ணுக்கு

வெள்ளாட்டு ஈரலை வகுந்து, கருஞ்சீரகம் நுனிக்கி வைத்து சுட்டுத் திண்ணவும் தீரும்.

### துவாலை குட்டமருந்து

அத்திப்பட்டை, ஆவாரம்பட்டை, துளசி ஆக மூன்றும் கஷாயம் பண்ணி 3 நாள் சாப்பிடவும் தீரும். அத்திமரம் முற்றின பட்டையை இடித்துக் கால்படி சாறுபிழிந்து கொண்டு, கம்பி பதமாகக் காய்ச்சி பக்குவத்தில் இறக்கி வைத்துக்கொண்டு 3 நாள் மேற்படி பாகப்படி செய்து சாப்பிடவும் தீரும்.

### கெற்ப,சூதக வாய்வுக்கு

பெருங்குமட்டி, பேய்ப்பீர்க்கு, நிலவாகை சமூலத்தோடே வத்திரகாயம் பண்ணி வைத்துக்கொண்டு சுக்குக் கஷாயத்தில் வெருகடிப் பிரமாணம் பொடிபோட்டு,

சாப்பிடவும். நன்றாய் பேதியாகும். பேதி நிரம்ப எடுத்தால் உப்புப்போட்டுக் கஞ்சி குடிக்கவும். இப்படி 3 நாள் சாப்பிடவும். பூச்சிகள் எல்லாம் விழும். கெற்பமுண்டாம்.

### முகத்தில் கறுப்பு மாற

கோஷ்டம் வசம்பு

சந்தனம் கோரோசனை

ஆலிலைப்பருப்பு

ஆக இவை பாலிலரைத்து முகத்தில் பூசவும், தீரும்.

### மருந்து

மஞ்சளைத் தோல்போக்கி வெள்ளைச்சாரணை வேரும், எருமைப்பாலிலரைத்து மேல்த்தேய்க்க கறுப்பு மாறும்.

### மருந்து (வேறு)

மஞ்சள், சந்தனம் எருமைப்பாலில் அரைத்து, மேல்த் தேய்க்க கறுப்பு மாறும்.

### விக்கலுக்கு

இந்துப்பு, திப்பிலி இரண்டையும் தூள்பண்ணி தேன்விட்டுக் கிளறி திண்ணத் தீரும்.

### வித்துத்தம்பணம்

ஓரிலைத்தாமரைவேர், வேலி உத்தாமணிவேர், முக்கிரமலை தாங்கிவேர், விளாங்காய் அரைத்து வெண்ணெயில் கலக்கி வேகவைத்து இறக்கி ஒரு காசிடை தண்டில் பூசவும். விழாது.

## அட்டாதிச் சூரணம்

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| தான்றிக்காய் | திப்பிலி |
| நெல்லிக்காய் | கடுக்காய் |
| காந்தம் | ஓமம் |
| கார்கோலரிசி | காயம் |

வகைக்கு 3 கழஞ்சு, சீரகம், நேர்வாளஞ்சுத்தி பண்ணி வகைக்கு 6 கழஞ்சு சேர்த்து வைத்துக்கொண்டு காந்தத்தைப் பழம்புளிக்குள் வைத்து வெந்தெடுத்துக்கொண்டு சேர்த்துக் கொள்ளவும். வாளத்தை எருமைச் சாணாகத்தில் வெந்தெடுத்ததோடு முளைப்போக்கி பருப்பை பசுவின் மோரில் போட்டு ஒருபொழுது ஊறப்போட்டு எடுத்து காயவைத்து முன் மருந்துகளுடன் சேர்த்திடித்து வச்சிரகாயம் பண்ணி வைத்துக்கொண்டு,

## எலிவிஷத்துக்கு

இலுப்பைப் பிண்ணாக்கு, எருமைத்தண்ணீர் விட்டு, அரைத்து எலுமிச்சங்காய்ப் பிரமாணம் எருமைத்தயிர் வடிகட்டி ஷெ மருந்தைக் குழப்பி சாப்பிட்டு, குளிர்ந்தநீரில் முழுகவும். 7 நாள், 7 பொழுது சாப்பிடவும். பத்தியம், உப்பாகாது. எருமைத்தயிர் விட்டு சாப்பிடவும். பத்தியமில்லை.

## இரசசூலை முறிக்க

சுரகுடுக்கைக் கரியை நுனிக்கி பசுவின் மோரில் போட்டு சாப்பிடத்தீரும்.

## வாய்வுக்கு மருந்து

வடக்கே போகிற முருங்கைவேர், வேப்பங்கொழுந்து இரண்டும் அரைத்து 3 கழற்சிக்காயளவு உருண்டையை திருநீரில் விரக்கிச்சாப்பிடத்தீரும். பத்தியம் புளி ஆகாது.

சுக்கை இடித்துப் பொடிபண்ணி வெள்ளக்கோழிக் காரத்தையும் பொடிபண்ணி கருப்புக்கட்டியில் விறக்கி 8 பொழுது சாப்பிடத்தீரும். பத்தியமில்லை.

### ஒருதலை மண்டையிடிக்கு

வேலிப்பருத்தியைக் கொண்டுவந்து கசக்கிச் சாறு பிழிந்து தலையிலே தேய்க்கத்தீரும்.

### விஷபேதி,வயிற்றுவலி கபங்களுக்கு வாத ராட்சதச் சூரணம்

| | |
|---|---|
| ரசம் | கருஞ்சீரகம் |
| கெந்தகம் | கண்டத்திப்பிலி |
| சுக்கு | சிற்றரத்தை |
| மிளகு | ஓமம் |
| திப்பிலி | வெண்காரம் |
| சீரகம் | ஓமம் |

இவை சமன்கூட்டி ஆறப்பொடி பண்ணி அனுபான விசேஷத்தில் சகல ரோகங்களுக்கும் கொடுக்கவும். பொடி பண்ணுகிறது மெல்லியதாய்ப் பண்ணி வடிகட்டி எடுத்து வைத்துக்கொள்ள வேண்டியது. தருணங்கள் விஷபேதி, அங்கத்தியம், சருவாங்க வலி, வயிற்றுவலி, சளி, கபசுரமிவைகளுக்கு அனுபானத்துடனே கொடுக்கக் குணமாகும்.

### சகலமான் புண்கிரந்தி மேகசூலைக்கு சீனபாகுச் சூரணம்

| | |
|---|---|
| திரிபாலை | விளங்கம் |
| திரிகடுகு | காந்தம் |
| வெட்பாலை | வால்மிளகு |
| அரிசி | அரிதாரம் |
| கொத்தமல்லி | சாதிலிங்கம் |
| வெண்காரம் | ஓமம் |
| துருசு | துத்தம் |
| சாதிக்காய் | சாதிப்பத்திரி |

| | |
|---|---|
| கிராம்பு | நவச்சாரம் |
| எவச்சாரம் | கொடிவேலிவேர் |
| சீரகம்இரண்டும் | கடுகு |
| குரோசாணி ஓமம் | கல்மதம் |
| அபினி | கல்நார் |
| கஸ்தூரி மஞ்சள் | கொடிவேலிவேர் |
| வாலுழுவை அரிசி | வெட்பாலை அரிசி |
| கார்போகவரிசி | மூங்கிலரிசி |

வகைக்குப் ¼ பலம், பரங்கிப்பட்டை 4 பலம், கெந்தகம் 2 பலம், குக்குலசேர் 1, சுத்திபண்ணி இடித்து வடித்துக்கொண்டு தேனில் கொள்ள சகலமான புண், கிரந்தி, சூலைமேகம், மேகசூலை, வாய்வுக்கடி வகைகள் சகல நோயும் குணமாகும்.

**மகாதாளிசைச் சூரணம்**

| | |
|---|---|
| தாளிசபத்திரி | இலவங்கப்பட்டை |
| மிளகு | இலவங்கப்பத்திரி |
| சிறுநாகப்பூ | தகரம் |
| சுக்கு | கொத்தமல்லி |
| வாய்விளங்கம் | பூலான்கிழங்கு |
| திப்பிலி | கடுக்காய் |
| செவியம் | தான்றிக்காய் |
| அரத்தை | நெல்லிமுள்ளி |
| கிரந்தி | கொடிவேலி |
| கிராம்பு | இலாமிச்சைவேர் |
| தக்கோலம் | அரேணுகம் |
| கோரைக்கிழங்கு | சடாமாஞ்சி |
| நல்ல சந்தனம் | அகில்கட்டை |

வகைக்கு 2 பலம். இதுகளுக்குச்சமன் சர்க்கரைக்கூட்டி, சூரணமும், சர்க்கரையும் கலந்துகொண்டு பூரண சந்திரவேதையம் எவ்வளவாகினும் கலந்துகொண்டு வெருகடிப் பிரமாணமிரண்டு நேரமும் கொள்ளத்தீரும்.

**தீரும் வியாதி:** வாத பித்த சிலேட்டுமம், பாண்டு, சோகை, அதிசாரம், சுவாச காசம், சுரசீதம், சிரோப்பிரேமை, மரணவேதனம், ஆறமானம், அக்கினிமாந்தியம், அன்னதேகம், அரோசிகம், உத்காரம், வகைசூலம், அசீரணம், குதிகாசம், விக்கல், வெறுவயம், சருவாங்க வாய்வு, நானாவித சுரம், பழஞ்சுரம், உடம்பு, ஈளை, சதுவன்னம், தாது நாசத்துவம், அசுரகாரதி விரணம், உதிர்தேகம், மூர்ச்சை, ருது சூனியம், திக்பிரமை, நாக குலமுகம், இளைச்சது பாசம், கண்டதோஷம், வேதனம், முழங்கால் நோவு, விலாப்புறத்து நோவு இதெல்லாம் தீரும்.

**அக்கினி மாந்தியத்துக்கு அஷ்டாதிச் சூரணம்**

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | சீரகம் |
| கருஞ்சீரகம் | இந்துப்பு |
| ஓமம் | பெருங்காயம் |

வகைக்கு சமன்கூட்டி பெருங்காயம் ஒரு சரக்குக்கு நாலத்தொன்று கூட்டிச் சூரணம் பண்ணி சர்க்கரை கலந்து கொடுக்கவும். அக்கினி மாந்தியம், சருவாங்க வாதமும் போகும்.

**சுகவிரோசனத்துக்கு அயிபத்திச் சூரணம்**

| | |
|---|---|
| நெல்லிமுள்ளி | கோரைக்கிழங்கு |
| வாய்விளங்கம் | கடுக்காய் |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | ஏலம் |

வகைக்கு 1 வராகன் சிவதைவேர் சுத்திபண்ணி இவை 30வராகன், சர்க்கரை 40 வராகன் ஆக 80 வராகன் சூரணம் பண்ணி கலந்துகொண்டு மூன்று வராகனிடை வெந்நீரில் கொள்ளவும். 6 தரம் பேதியாகும். சுக விரேசனம்.

### மேகத்துக்குச் சூரணம்

பூலாங்கிழங்கு, கீழ்காய்நெல்லி, ஓரிலைத்தாமரை, கோரைக்கிழங்கு சமன்கூட்டியதற்குச் சர்க்கரையை ½மண்டலங் கொள்ளச் சகல மேகமுந்தீரும்.

### வேறு

கொட்டைக்கரந்தை, செருப்படி, வெள்ளருகு மூன்றும் சூரணம் பண்ணி இதற்குப் பாதி சர்க்கரை சேர்த்துத் தின்ன இருபது நாளையிற் சகல மேகமுந் தீரும்.

### பல்லுக்குப் பொடி

சேங்கொட்டை-30
கொட்டைப்பாக்கு-30
உப்பு ¾ படி
உப்புப்போட்ட பழமாங்கொட்டை-30
எருக்கம்பழுப்பு 1 சேர்
களிப்பாக்கு 1 பலம்
துரிசி 1 பலம்
இலுப்பையில் தூக்கு-1

இதுகளெல்லாங் கருக்கித் துரிசி, காசிக்கட்டி பொடிபண்ணிக் கூடப்போட்டு எல்லாமினமாய்க் கைமுறையைப் பொடியாக்கிப் பல் விளக்கிக்கொண்டுவரப் பல்வலி சகலமுந்தீரும்.

### பல்வலிக்குப் பொடி

கருவேலம்பட்டை 10சேர், கிளுவைப்பட்டை 10சேர், தண்ணீர் 16 சேர், பானையில் இரண்டு பட்டையையும் இடித்துப்போட்டு, தண்ணீர்விட்டுக் காய்ச்சி நாலு சேராக வடித்துக்கொண்டு, சேங்கொட்டை 1 சேர், அரைப்பொடி 2பலம், எருக்கம்பால் ¼சேர், எலுமிச்சம்பழம்-1, அலகு பாக்கு, காசுக்கட்டி, துத்தம், துரிசு, கடுக்காய் வகைக்கு 6 வராகன், சாதிக்காய் 1 வராகன், பச்சைக்கற்பூரம் 1 வராகன் இந்த சரக்குகளெல்லாம் வெவ்வேறாகப் பொடிபண்ணி பொடியெல்லாம் ஒருமிக்க சேர்த்துவைத்துக்கொண்டு,

எலுமிச்சம்பழச்சாறு, அரைத்துப்பொடியில் விட்டு எருக்கம்பாலும் விட்டு அரைத்துப் பொடியைக் கிளறி காயவைத்து, தூள்பண்ணி முன்கடைச்சரக்கு பொடியுடன் கலந்து வைத்துக்கொண்டு கொட்டாங்கச்சியிலும், சேங்கொட்டையிலும், பிரத்யேகமாய் தைலமிறக்கி இந்த இரண்டு தைலமும் முன் கஷாயத்தோடே, கையாந்தகரைச் சாற்றை சேர்த்தடுப்பில் வைத்து வெகுதீயா எரித்து முன் மருந்து பொடி எல்லாம் போட்டுக் கிளறி இறக்கி காயவைத்துச் சொரண்டி பொடிபண்ணி, கையில் வைத்துக்கொண்டு தினந்தோறும் காலமே பல் விளக்க பல்வலி சகலமும் தீரும்.

### பல்வலிக்கு (வேறு)

மருக்காரை, சுக்கு, மருதந்தோல், வெள்வேல், எடுக்காவாரை, பிரா ஏழும், நாலொன்றாய்க் காய்ச்சி நான்கு நாட்கள் கொப்பளிக்க பாலன் பல் எல்லாம் கிழவன் பல்.

### மார்புவலி, வயிற்றுவலி, மேகத்துக்கு குக்குலு ரசாயனம்

குக்குலு 3 பலம், சுத்திப்பண்ணுகிற வேப்பம்பட்டை, கண்டங்கத்திரி, சீந்தில்தண்டு இவைகளில் சுத்திப்பண்ணிக் கொண்டு,

| | |
|---|---|
| கொத்தமல்லி | ஏலம் |
| சாதிக்காய் | இலவங்கம் |
| அசமதாகம் | வாலுழுவை |
| அதிமதுரம் | அரத்தை |
| சித்திரமூலம் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |

இவை வகைக்கு 2 வராகன்

சர்க்கரை 5 பலம், தேன் 5 பலம், பசுவின்நெய் 2¾ பலம் கடைச்சரக்கெல்லாமிடித்து வஸ்திரகாயம் பண்ணிக்கொண்டு தேன், சர்க்கரை, நெய் இவை விட்டு பண்ணிக்கொள்ளவும்.

**தீரும் வியாதி:** மார்புவலி, வயிற்றுவலி, சுரம், குன்மம், அதிசாரம் தீரும். தாதுவிருத்தி உண்டாம். சரீரபுஷ்டி உண்டாம். கார்ப்பு, புளிப்புத் தவிர்க்கவும்.

**வேறு:** மேகமும் போகும்.

**பஞ்சகாச மிருத்த ரோகத்துக்கு பிப்பிலாதி ரசாயனம்**

திப்பிலி 16 பலம்
வாய்விளங்கம் 4 பலம்
மிளகு 4 பலம்
செவியம் 2 பலம்
சுக்கு 2 பலம்
இலவங்கப்பட்டை 1 பலம்
கடுக்காய் 1 பலம்
தான்றிக்காய் 1 பலம்
சாதிக்காய் ¾பலம்
சர்க்கரை 8 பலம்
கண்டுபரங்கி 4 பலம்
திப்பிலிமூலம் 4 பலம்
கொடிவேலி 4 பலம்
லோக செந்தூரம் 2 பலம்
ஏலம் 1 பலம்
தான்றிக்காய் 1 பலம்
நெல்லிமுள்ளி 1 பலம்
தேன்படி 2 பலம்

**தீரும் வியாதி:** பஞ்சகாசம், மிருத்து ரோகம், பாண்டுச்சுரம், வாய்வுச்சுரம், வாய்வு, அக்கினிமாந்தம் இவைகளெல்லாம் குணமாம். கை கண்டது.

**இரத்த பித்தம், ஆம்பல் பித்தத்துக்கு கற்சூராதி ரசாயனம்**

பேரீச்சன்பழம் 32 பலம்
சுக்கு
மிளகு
இலவங்கப்பத்திரி
சடாமாஞ்சி
பேராமுட்டிவேர்
சதகுப்பை
நல்ல சந்தனம்
காட்டெருமைப்பால்
சர்க்கரை 32 பலம்,
திப்பிலி
இலவங்கப்பட்டை
ஏலம்
சிற்றாமுட்டிவேர்
நாகமல்லிவேர்
பூலாங்கிழங்கு
நன்னாரிவேர்
தக்கோலம்
ரேணுகம் என்னும் இலந்தைக்கொட்டை
குடசப்பாலைவிதை
கிராம்பு
கருஞ்சீரகம்
நற்சீரகம்

| | |
|---|---|
| வெட்டிவேர் | விலாம்பிச்சன்வேர் |
| கோஷ்டம் | விளாம்பழம் |
| முந்திரிப்பழம் | குங்குமப்பூ |
| பருத்திக்கொட்டைப் பருப்பு | |
| சாதிக்காய் | சாதிப்பத்திரி |

இவை வகைக்கு 2 பலம்,

| | |
|---|---|
| பசுவின் நெய் 1படி | பசுவின்பால் 2 படி |
| தேன் 1 படி | |

ரசாயனம் பண்ணிக்கொண்டு ராசமிருகாங்கம் பொழுதைக்கு அரைப் பணஎடை கூட்டிக்கொண்டு, நெல்லிக்காய்ப் பிரமாணம் இரண்டு நேரமும் உண்டு வரவும்.

**தீரும் வியாதி:** ரத்த பித்தம், அம்பல பித்தம், சிரோபிரமணம், அனல் பைத்தியம், மூர்ச்சை, உத்ரகாரம், மனப்பைத்தியம், பீடகம், தொடக பைத்தியம், தாருகம் முதலிய 21 பைத்தியமும், நானாவித சுரமும், சயமும், உள்மாந்தை, அக்கினி மாந்தம், அசீரணம், அரோசிகம், தாகம், கண்டகோழனம் இதுவெல்லாம் குணமாம்.

## மேக உஷ்ணம், அரோசிகம், தாது, விருத்திக்கும், மத சமேக ரசாயனம்

| | |
|---|---|
| பரங்கிப்பட்டை | 10 பலம் |
| திரிகடுகு | திரிபலை |
| ஏலம் | கிராம்பு |
| சாதிக்காய் | சாதிப்பத்திரி |
| சன்னலவங்கப்பட்டை | குராசாணி |
| ஓமம் | வாய்விளங்கம் |
| சிற்றரத்தை | சிறுதேக்கு |
| செவியம் | திப்பிலிமூலம் |
| கொத்தமல்லி | சீரகம் |
| சடாமாஞ்சி | கோஷ்டம் |
| விலாம்பிச்சன்வேர் | அமுக்கிராவேர் |
| சிறுநாகப்பூ | வெட்பாலை |

| | |
|---|---|
| அரிசி வாலுளுவை | ரேணுகம் |
| கசகசா | நீர்முள்ளிவிதை |

நெருஞ்சிக்காய் இவைகள் ¾ பலம்,

| | |
|---|---|
| தண்ணீர்மீட்டான் | நிலப்பனங்கிழங்கு |
| முருங்கைப்பூ | தூதுவளை |

இவைகள் வகைக்கு 1 பலம்

| | |
|---|---|
| முந்திரிச்சன் பழம் | பேரீச்சன்பழம் |

சீந்தில் சர்க்கரை இவை வகைக்கு ¾ பலம்

| | |
|---|---|
| கற்கண்டு | 5 பலம் |

தேன், நெய் இவை வகைக்கு ¼ படி

இவைகளைச் சேர்த்து ரசாயனம் பண்ணிக்கொள்ள சகலமான மேக உஷ்ணங்கள் தீர்ந்து, தாது விருத்தியுண்டாம். அரோசிகந் தீரும்.

## அசுவகந்தி ரசாயனம்

| | |
|---|---|
| அமுக்கிராக்கிழங்கு | 26 பலம் |
| ஏலம் | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | சிறுநாகப்பூ |
| கொத்தமல்லி | முந்திரிச்சன்பழம் |
| சந்தனம் | சன்னலவங்கப்பட்டை |
| கற்கடகசிங்கி | காட்டெருமைப்பால் |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | வெட்டிவேர் |
| கிராம்பு | திப்பிலி |
| மூலம் | சித்திரைமூலம் |
| செவ்வியம் | |

இவை வகைக்கு 3 வராகன்

இதுவெல்லாம் சூரணம் பண்ணிக்கொண்டு பசுவின் பால் 4 படி, சட்டியில் விட்டு, சர்க்கரை 50 பலம் போட்டு பாகுப்பண்ணி, ரசாயனம் பண்ணிக்கொள்ளவும். உஷ்ணம், மேககுரம் இரத்த பைத்தியம், பித்தரோகம், சம சத்தமும், அந்தி சுரமும் தீரும். குணமாம்.

### பதினெட்டுக் குட்டத்துக்கு கெந்தக ரசாயனம்

| | |
|---|---|
| கெந்தகம் | 6 பலம் |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| இலவங்கப்பட்டை | இலவங்கப்பத்திரி |
| ஏலம் | சணப்பன் விதை |
| செங்கொட்டை | வாய்விளங்கம் |

இது வகைக்கு 1 பலம்

சூரணம் பண்ணி தேனிலுண்டைப் பண்ணிக் கொள்ளவும். வெண்ணெயில் குழப்பி வியாதிக்குத் தக்கதாய் கொடுக்கவும்.

### சேஷ்டும முதலானதுக்கு அரத்தை முதலான லேகியம்

| | |
|---|---|
| பேரரத்தை 25 பலம் | சித்தரத்தை 25 பலம் |
| கொடுவேலி 50 பலம் | செவியம் 32 பலம் |
| மிளகு | திப்பிலி |
| கண்டுபாரங்கி | சிற்றாமுட்டி |
| பேராமுட்டி | இலவங்கப்பட்டை |
| ஆயில்பட்டை | செம்முள்ளி |
| ஆடாதொடைவேர் | நெருஞ்சில்வேர் |
| வெள்ளை சங்கங்குப்பி | கறுத்தசங்கங்குப்பி |
| பிரண்டைவேர் | சிறுகாஞ்சொரிவேர் |
| நீலிவேர் | முக்காவேளை |
| சாட்டரணைவேர் | நாரத்தம் |

இவை வகைக்கு 16 பலம் எடுத்து,

இடித்துப் பானையில் 8 மரக்கால் தண்ணீர்விட்டு குறுணியாக் காய்ச்சி வடித்துக்கொண்டு பழைய வெல்லம் 80பலம் போட்டுக் கரைத்து அடுப்பில் வைத்துப் பாகுபதமாய் வரும்பொழுது, போடுகிற கற்கத்திரவியம், சுக்கு, மிளகு, திப்பிலி, ஆனைத்திப்பிலி, திப்பிலிமூலம், அதிவிடையம், செறுதேக்கு, வாய்விளங்கம், இலவங்கம், கற்கடக சிங்கி,

விருகன்கிழங்கு, பூலான்கிழங்கு, சிறுநாகப்பூ, தக்கோலம், கொத்தமல்லி, ரேணுகம், லோக செந்தூரம், ரசசெந்தூரம் வகைக்கு 5 பலம், இதுவெல்லாமிடித்து சீலை வடிகொண்டு தேன் இரண்டுபடி வார்த்துச் சூரணம் போட்டு வெண்காரம் 4பலம், பொரிச்சுப்போட்டு, பதமாய் இறக்கிக்கொள்ளவும்.

**தீரும் வியாதி:** சேஷ்டுமம், இருபது பஞ்சகாசம், சுவாசகாசம், மந்தாக்கினி, மலபந்தம்,அன்னத்துவேஷம், அரோசிகம், வாந்தி, மார்நோவு,விக்கல் தலைவலி, பீனிசம், வாய்வு முதலான வியாதி எல்லாந்தீரும்.

### வாய்வுக்குச் சயத்துக்கு திப்பிலாதி லேகியம்

| | |
|---|---|
| திப்பிலி | 8 பலம் |
| மிளகு | சுக்கு |
| வாய்விளங்கம் | அமுக்கிராவேர் |

இவை வகைக்கு 2 பலம்

| | |
|---|---|
| கொடிவேலி | செவியலோகம் |
| அரத்தை | கையாந்தகரை |

இவை வகைக்கு 1 பலம்

இடித்தரைத்து, சர்க்கரை 5 பலம், நாழி தேன் சேர்த்து இதனைக் கலந்தருந்த தீரும்.

**தீரும் வியாதி:** வாய்வு, சயம், சுவாசகாசம்.

### இருமலுக்கு லேகியம்

| | |
|---|---|
| வெண்காரம் | திப்பிலி |
| புழுங்கல் அரிசி | மிளகு |

கிராம்பு, புழுங்கல் அரிசி வறுத்துக்கொள்கிறது.

எல்லாம் சமன் எடை நெய்யில் லேகியம் பண்ணிக் கொள்ளவும். சகல இருமலுந் தீரும்.

புழுங்கலரிசி நெய்யில் வறுக்கிறது.

**வேறு**

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | சித்தரத்தை |

இவை வகைக்கு 1 வராகன்

| | |
|---|---|
| தேத்தான்கொட்டை | 4 வராகன் |
| சீனி சர்க்கரை | 8 வராகன் |
| ஆவின் பால் 1சேர் | ஆவின் நெய் ¼ சேர் |

இவை லேகிய பதமாய்ப் பண்ணிக்கொள்ளுகிறது. சகல அத்தி சுரமுந் தீரும். இருமலும் தீரும். தேத்தான் வித்து ஊறப்போட்டு மேல் தேய்ச்சுப் போட்டரைத்துக் கொள்ளுகிறது.

**கண்டாமலக லேகியம் (பைத்தியம், வாய்வுக்கு)**

| | |
|---|---|
| நெல்லிக்காய்ச்சாறு 1 சேர் | பால் 1 சேர் |
| தாளிசபத்திரி | மிளகு |
| சீரகம் | கெந்தவடி உப்பு |
| சித்திரமூலம் | சாதிக்காய் |
| கிராம்பு | சாதிப்பத்திரி |
| மூங்கிலுப்பு | கூகைநீறு |
| திப்பிலி மூலம் | செவியம் |
| சுக்கு | கொத்தமல்லி |
| ஆனைத்திப்பிலி | திப்பிலி முந்திரிச்சன் பழம் |
| கண்டத்திப்பிலி | விலாமிச்சன்வேர் |
| சிவதைவேர் | |

இவை வகைக்கு 2 வராகன்

| | |
|---|---|
| சர்க்கரை 3 சேர் | நெய் ¼ சேர் |
| தேன் ¾ சேர் | |

லேகியம் பண்ணிக்கொள்ள சகலமான பைத்திய வாய்வுந் தீரும்.

## மேகத்துக்கு பரங்கிப்பட்டை லேகியம்

| | |
|---|---|
| பரங்கிப்பட்டை 1 சேர் | சுக்கு 3 பலம் |
| கடலிறஞ்சிப்பட்டை 2 பலம் | சீனிச்சர்க்கரை 2 சேர் |
| தேன் 2 சேர் | நெய் ¾ சேர் |

சீரகம் நெய் குத்திக்கொள்ளுகிறது. சகல மேகமும் நிற்கும்.

## மேகத்துக்கும் சகல வியாதிக்கும் மதசுமேக லேகியம்

பரங்கிப்பட்டை 3 சேர்

**கஷாயவகைகள்:**

| | |
|---|---|
| வெள்ளைச்சாரணைவேர் | பேராமுட்டி |
| குப்பைமேனிவேர் | நொச்சி |
| பசுமஞ்சள், இலைக்கள்ளி | எருக்கில் |
| முதியார்கூந்தல் | எருமையாட்டான்கொடி |
| கையாந்தகரை | பிரமியப்பூண்டு |
| தும்பை | சட்டிசாரணை இலை |
| சிறுகுறிஞ்சா | சித்திரமூலம் |
| தழுதாளை இஞ்சி | சட்டிச்சாரணைக்கிழங்கு |
| பொடுதல் | கோரைக்கிழங்கு |
| சித்தாமுட்டி | நிலப்பனங்கிழங்கு |
| சீந்தில்கொடி | விருகன்கிழங்கு |
| அமுக்கிராவேர் | வெள்ளருகு |
| சங்கன்வேர் | பிரப்பன் கிழங்கு |
| மாவிலங்கம்வேர் | வேப்பன்பட்டை |
| வில்வப்பத்திரிவேர் | தண்ணிமுட்டான்கிழங்கு |
| பற்பாடகம் | ஓரிலைத்தாமரை |
| நிலையாவாரை | ஆற்றுமுள்ளி |
| முருங்கைவேர் | பொய்த்தலை |
| செறுப்படிவேர் | வெள்ளைக்காக்கரட்டான் |
| சிவதைவேர் | வேர் |

ஆகியவைகள் வகைக்கு 3 தூக்கு. இதுகள் சாறு வகைக்கு 1படி, வேர் வகைக் கஷாயம் வைத்துக்கொள்கிறது. எலுமிச்சம்பழம் 150, தேங்காய் 20, பால் பிழிந்துகொள்ள வேண்டியது.

முலைப்பால் 1 படி பசுவின்பால் 2 படி
கடுக்காய் 10 பலம் தான்றிக்காய் 10 பலம்
நெல்லிமுள்ளி 10 பலம் சுக்கு 7 பலம்
மிளகு 7 பலம்,
திப்பிலி தாளிசபத்திரி
செவியம் சிறுநாகப்பூ
வாய்விளங்கம் ஓமர்
கருஞ்சீரகம் சித்தரத்தை
திப்பிலிமூலம் பேய்ப்புடல்
இவை வகைக்கு 4 பலம்
கற்கடக சிங்கி தக்கோலம்
வால்மிளகு மரமஞ்சள்
கஸ்தூரிமஞ்சள் கிராம்பு
கொத்தமல்லி இந்துப்பு
சடாமாஞ்சி ஏலம்
சீரகம்
இவை வகைக்கு 2 பலம்
சாதிப்பத்திரி சாதிக்காய்
கோரோசினை
வகைக்கு 1 பலம்
குங்குமப்பூ 2 வராகன் சர்க்கரை 60 பலம்
நெய் 45 பலம் தேன் 45 பலம்

முன்சொன்ன கஷாயம் வகைகளில் இலைகள் அழைப்பித்து சாறுபிழிந்து கொள்ளவேண்டியது. வேர்களை அழைப்பித்துக் கஷாயம் வைத்துக்கொள்ள வேண்டியது. இறுத்துக்கொண்டு பாகுபண்ணி லேகியம் பண்ணிக் கொள்ள வேண்டியது. பதமாய் செய்துகொள்ள வேண்டியது. பரங்கிப்பட்டையைக் கடைச்சரக்கோடே சேர்த்துக்கொள்ள வேண்டியது. இந்த அவிழ்தம் இரண்டு வேளையும் புன்னைக்காயளவு கொண்டால், தீரும் வியாதி மேகமும், 4448-வியாதியுந்தீரும். வைத்தியர்கள் தங்க கடையம் பேசிக்கொண்டு செய்துகொடுக்கவும்.

## இடுப்புவலி, வீரிய விருத்திக்கு லேகியம்

புரசம்பிசின் 1¾ வராகன்
சாதிப்பத்திரி ¾வராகன்
நிலைக்கடம்பு 1 வராகன்
நீர்முள்ளிவிதை 2 பலம்
கடலை மாவு 1 பலம்
சாதிக்காய் ¾வராகன்
கிராம்பு ¾ வராகன்
பழவெல்லம் 2 பலம்
எள்ளு 1 பலம்

இதுவெல்லாமொரு தேங்காய்க்குள்ளே, வெல்லம் நீங்கலாக அடைத்து வாயைமூடி சாணிப் பிடிப்பிச்சு புடம் போடவும். தேங்காய் வெடிச்ச உடனே எடுத்துக்கொண்டு ஓடு தள்ளிப்போட்டு, வெல்லம் கூட்டி இடிச்சு லேகியம் போலேயெடுத்துக் கொள்ளவும். சுண்டைக்காய்ப் பிரமாணம் இரண்டுவேளையுங் கொள்ள வேண்டியது. இடுப்பில் வலி போம். வீரிய விருத்தியுண்டாம். பந்தயம் போட்டுக் கொண்டு செய்து கொடுக்கவும். பத்தியமில்லை.

## தாதுவிருத்திக்கு மன்மத சிந்தாமணி லேகியம்

சாம்பிராணி 2 பலம்
சிறுநாகப்பூ 2 பலம்
நெய் ¾சேர்
வெல்லம் ¾ சேர்
சன்னலவங்கப்பட்டை 2 பலம்
கஞ்சா ¾சேர்
நிலையாவாரை 1 பலம்

கஞ்சாவில் நெய்விட்டு வேகவைத்து இறக்கிக் கொண்டு, லேகியமாய் இடித்துக்கொள்ளவும். சுண்டைக்காய் அளவு கொள்ளவும். விருத்தி உண்டாம்.

## வீரிய விருத்திக்கு லேகியம்

அதிமதுரம்
பூனைக்காலி விதை
தண்ணிமீட்டான்
இலவம்பிசின்
தேன்
நெருஞ்சிவிதை
நிலப்பனக்கிழங்கு
முள்ளி
சர்க்கரை

முதலியன சேர்த்து லேகியம் பண்ணிக்கொள்ளவும்.

அமுக்கிரா எள்ளு
உளுந்து
தண்ணீர்மிட்டான்
காட்டறனை
சர்க்கரை
தேன்

லேகியம் பண்ணிக்கொள்ளவும்.

## தாதுவிருத்திக்கு மருந்து உருண்டை லேகியம்

பேரீச்சங்காய்
முருங்கைவிதை
ஊமத்தன்விதை
குங்குமப்பூ
கொதும்பை
பச்சைக்கற்பூரம்
மாவு பாலு ரசம்
சாதிக்காய்
கெந்தகம்
பத்திரி ஏலம்
அபின்
கிராம்பு
கஞ்சா
கசகசா
பூனைக்காலி
நிலப்பனை
பலகறை
இசுப்புக்கோல்
முருங்கைப்பூ
நீர்முள்ளிவிதை
ஆனைத்திப்பிலி

வகைக்கு $3/4$ பலம் இவைகளை கல்வத்தில் மயனம் போலப் பசுவின்பால் விட்டரைத்து மருந்து இடைக்கற்கண்டு சேர்த்தரைத்து தூதுவளம் பழம் அளவு செய்து காயவைத்துக் கொள்ள விருத்தியாம்.

## தாதுவிருத்திக்கு மருந்து உருண்டை லேகியம் (வேறு)

கஞ்சா
அபின்
சாதிக்காய்
பத்திரி
கிராம்பு
நீர்முள்ளிவிதை
இசுபுகோல்
பூனைக்காலிவிதை
நிலப்பனைக்கிழங்கு
முருங்கைவிதை
சாதிலிங்கம்
சிறுநாகப்பூ
கருவாய்ப்பட்டை
வால்மிளகு

வகைக்கு 3 வராகன் எடுத்துக்கொண்டு, எல்லாமிடித்து பசுவின்பால் விட்டரைத்து முற்றின பெருந்தேங்காயில் அடைத்து ஓடு கருக புடம்போட்டெடுத்து சரக்கிடை

கற்கண்டு சேர்த்து மெழுகு போலரைத்து சுண்டைக்காயளவு போலே உருட்டி சரீரமறிந்து கொடுக்க விருத்தியுண்டாம்.

## தாதுவிருத்திக்கு தேற்றான் லேகியம்

சீரகம் 1படி, தேற்றான்விதை 4 பலம், சீரகத்தை சீலையில் முடிஞ்சு தேற்றான்விதையும், நறுக்கிப்போட்டு, நாலு மரக்கால் தண்ணீர்விட்டு, நாலு நாளைக்கு ஒரு விரகாலே நாலு நாழி வீதம் எரித்து, முக்கால்படி தண்ணீருக்குத் தக்கதாக இறக்கி வடிகட்டி வைத்துக்கொண்டு

| | |
|---|---|
| சன்னலவங்கப்பட்டை | லவங்கப்பட்டை |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| வெட்பாலை | குரோசாணி ஓமம் |
| சீரகம் | கொத்தமல்லி |

இவை வகைக்கு ¾ பலம்

| | |
|---|---|
| அமுக்கிராவேர் 2 பலம் | பரங்கிப்பட்டை 4 பலம் |
| கோஷ்டம் ¾ பலம் | அதிமதுரம் ¾ பலம் |
| சிறுதேக்கு பலம் | செவியம் பலம் |
| நன்னாரிவேர் ¾ பலம் | விளாம்பிச்சன்வேர் பலம் |

இதுவகைகள் சூரணம் பண்ணி வடிகட்டி வைத்துக்கொண்டு,

| | |
|---|---|
| ஏலம் 2 வராகன் | சாதிக்காய் ¾ வராகன் |
| சாதிப்பத்திரி ¾ வராகன் | கிராம்பு 1 வராகன் |

இந்த நாலுவகையும், அலாதியாய்ச் சூரணம் செய்து வைத்துக்கொண்டு, சர்க்கரை 16 பலம் அந்தக் கஷாயத்தில் கரைத்து வடிக்கட்டி மெழுகு பதமாய்க் காய்ச்சி, மெழுகு பதமாய் வரும்போது வடிகட்டி சுயம்பு தேனாய் 6 பலம் விட்டுக் கிண்டி, உடனே இந்த சூரணம் எல்லாம் போட்டுக் கிண்டுகிறது. அதற்குமேல் பசுவின்நெய் தளர ¾சேர் விடுகிறது. அதற்குமேல் நாலு வகை சூரணமும் போடுகிறது.

கிண்டி வைத்துக்கொண்டு வேளைக்கு 1 வராகன் வீதம் இரண்டுவேளையும் கொள்ளவும்.

**தீரும் வியாதிகள்:** அரோசிகம், ஆரம்பசுரம் 21, மேகம், ஆரம்ப தாதுவிருத்தி, சகல வியாதிக்கும் அறமான லேகியம், கைகண்டது.

**எரிவு மயக்கம், பைத்தியத்துக்கு வில்வாதி லேகியம்**

வில்வவேர் 30 பலம், சிற்றாமுட்டிவேர் 3 பலம், கருவேப்பிலைத்தண்டு 10 பலம், முக்காவேளைவேர் 10 பலம் இடித்து எட்டு மரக்கால் தண்ணீர் வார்த்து, குறுணியாகக் காய்ச்சிக்கொண்டு, பழையவெல்லம் 30 பலம், அந்தக் கஷாயத்தில் போட்டுக் கரைத்து வடிகட்டிக்கொண்டு, காய்ச்சிப் பாகுகம்பிப் பதம் வரும்போது,

சுக்கு 1 பலம் — திப்பிலி 2 பலம்
திப்பிலிமூலம் 2 பலம் — சித்திரைமூலம் 2 பலம்
ஏலம் — சீரகம்
கிராம்பு — இந்துப்பு
மிளகு — இலவங்கப்பட்டை
சிறுநாகப்பூ — தாளிசப்பத்திரி
வகைக்கு 1 பலம்,
தக்கோலம் ¾ பலம் — இலவங்கப்பத்திரி ¾ பலம்

இதுவெல்லாம் பொன்னிறமாய் வறுத்து இடித்து வஸ்திரகாயம் பண்ணிக்கொண்டு பாகிற்போட்டு லேகியம் பண்ணி தென்னாழி விட்டுக்கிளறி பதத்திலிறக்கிப் பாக்கத்தனை இருவேளை உட்கொள்ளத் தீரும்.

**தீரும் வியாதி:** வானீர், கொளுத்தல், குலைஎரிவு, கைகால் எரிவு, மயக்கம், அக்கினிமாந்தம், அன்னதோஷம், வாந்தி இவைகள் குணமாம்.

***பத்தியம்:*** பால், தயிர், மோர், நெய் கூட்டவும். கைப்பு, புளிப்புத் தவிரவும்.

### மேகத்திற்கும், பைத்தியத்திற்கும் கற்சூராதி லேகியம்

| | |
|---|---|
| பேரீச்சன்பழம் | முந்திரிச்சன்பழம் |
| நெல்லிமுள்ளி | இலுப்பைப்பருப்பு |
| நல்ல சந்தனம் | அதிமதுரம் |
| நெருஞ்சிக்காய் | பூமிசர்க்கரைக்கிழங்கு |
| பெரும்பூசணி விதை | தண்ணீர்மிட்டான்கிழங்கு |
| கொத்தமல்லி | இலவங்கம் |
| நீர்முள்ளிவிதை | |

இவை எல்லாம் சமபாகம் கூட்டிச்சூரணம் பண்ணி இதற்குச் சமன் சர்க்கரை கூட்டிக்கொண்டு மூவிரல் கொண்டது. வெறும் வயிற்றில் காலமே கொண்டால் குணமாகும். அதின் குணம், மூத்திரக்கிரிச்சியம், ஆகிரணபயித்தியம், சருவமேகம், அங்கதேகம், சிரோதாகம், கண்ணெரிவு, கைகால் எரிவு, அரோசிகம் முதலான வியாதி எல்லாந்தீரும்.

### இருமல், அக்கினி மாந்தத்துக்கும், பழஞ்சுரத்துக்கும், அசுவகெந்தாதி லேகியம்

| | |
|---|---|
| அமுக்கிராவேர் 20 பலம் | சர்க்கரை 10 பலம் |
| பால் நாழி | நெய்-நாழி |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | இலவங்கப்பத்திரி |
| தாளிசபத்திரி | சிறுநாகப்பூ |
| கிராம்பு | முந்திரிச்சன்பழம் |
| பேரீச்சன்பழம் | ஏலம் |
| சீரகம் | இலவங்கப்பட்டை |
| கண்டத்திப்பிலி | அரத்தை |
| தூதுவேளைவேர்ப்பட்டை | கண்டங்கத்திரி |

வகைக்கு 1 பலம்,

தூதுவளை, கண்டங்கத்திரி நீங்கலாக மற்ற சரக்கெல்லாம் பொன்னிறமாய் வறுத்து இடித்து

வஸ்திரகாயம் பண்ணிக்கொண்டு பாலில் சர்க்கரை கரைச்சுப் பாகாய்க் காய்ச்சி,பதமாய் வரும்போது தூளை விட்டுக் கிளறி, நெய், தேன் விட்டு வைத்துக்கொண்டு கொள்ளத்தீரும்.

**தீரும் வியாதி:** அந்தரக சுரம், இருமல், அக்கினி மாந்தந் தீரும்.

**ஊரல் கிரந்திக்கு, பல்லாதி லேகியம் சகலமான மேக வாய்வுக்கு**

| | |
|---|---|
| சேங்கொட்டை | பச்சைக்கடலை |
| பரங்கிப்பட்டை | நெல்லிமுள்ளி |
| பேரெள்ளு வகைக்கு 5 பலம் | |

வெல்லம் 15, சுத்திப்பண்ணின கெந்தகம் ¾ பலம் இதுவெல்லாம் லேகியம்போல் இடித்து லேகியத்தை பின்னைக்காயளவு உருண்டை பண்ணி சாப்பிடவும். கார்ப்பு, புளிப்புத் தவிரவும் தீரும்.

**தீரும் வியாதி:** ஊறல், கிரந்தி போகும்.

**மேகவாய்வு, சூலை ஊறலுக்கு பல்லாதி லேகியம்**

| | |
|---|---|
| பழவெல்லம் | சித்திரைமூலம் |
| ஓமம் | கொப்பரை |
| பதறு | சேங்கொட்டை |
| வெள்ளை எள்ளு | பூண்டு |
| கடுகு | ரோகணி |
| மிளகு | நீரடிமுத்து |

இவைகள் சமன்கொண்டு லேகியம் பண்ணிக் கொள்ளவும். நாற்பது நாள் தின்னவும். கார்ப்பு, புளிப்புத் தவிரவும்.

**தீரும் வியாதி:** மேகவாய்வு, சூலைகள், ஊறல்கள் இவைகளெல்லாம் போகும்.

### சகலமான மேகவாய்வுக்கு பல்லாதி லேகியம்

| | |
|---|---|
| சேங்கொட்டை 1 சேர் | ஒருதலைப்பூண்டு 1 சேர் |
| ஓமம் உமி 1 சேர் | கருவேலம் பிசின் ¼சேர் |
| கொப்பரை 1 சேர் | பழவெல்லம் 1¼ சேர் |
| வெண்காரம் 2 பலம் | தும்பை இலைச்சாறு ¾சேர் |

சேங்கொட்டை குமிழ் போக்கி கூட்டிக்கொள்ளவும். ஓமம், அரிசி தள்ளி கூட்டிக்கொள்ளவும். உள்ளியில் நரம்பு போக்கிக் கூட்டிக்கொள்ளவும். வெண்காரம் பொரித்துக் கொள்ளவும். வெண்காரம் பொரித்துக்கொள்ளவும். கொப்பரைக்கு மேல் பரணி சீவிப்போடவும். பிறகு எல்லாங் கல்லுரலில் போட்டு லேகியமாக இடித்துக் கடைசியில் தும்பைச்சாறு விட்டு இடித்து லேகியமாய் எடுத்துக் கொள்ளவும்.

**தீரும் வியாதி:** சகலமான மேக வாய்வு, சகலமான மேகம், சகலமான கடி விஷம், கடிகளும் மண்டலங் கொள்ளத்தீரும். கார்ப்புப் புளிப்புத் தவிரவும்.

### சகல வாதம், பிடிப்புக்கு ரசபல்லாதிகை லேகியம்

| | |
|---|---|
| சேங்கொட்டை 2 பலம் | ஓமம் 1 பலம் |
| சுக்கு பலம் | கொத்தமல்லி பலம் |
| இலவங்கப்பட்டை பலம் | நீரடிமுத்து பலம் |
| வெல்லம் 2 பலம் | ரசம் 1 வராகன் |

இவைகளைக் கூட்டி புளிக்கரைச்சு அந்தத் தண்ணீர்விட்டு இடித்து லேகியமாய் எடுத்துக்கொள்ளவும். சகல வாதமும், சகல பிடிப்புந்தீரும்.

### மேகவாயு, சூலைக்கட்டுக்கு பல்லாதிகை

| | |
|---|---|
| சேங்கொட்டை 3 சேர் | பரங்கிப்பட்டை 3 பலம் |
| சங்கம்வேர் | பிரப்பன் கிழங்கு |
| காட்டுச்சீரகம் | கார்போகவரிசி |
| வெட்பாலை அரிசி | கருஞ்சீரகம் |

வெள்ளறுகு ஓமம்
கடுக்காய் தான்றிக்காய்
மிளகரணைப்பட்டை ஈசுரவேர்
புடப்பத்திரி வேர் சித்திரைமூலம்
கண்டுதிப்பிலி வகைக்கு 2 பலம்

நீரடி முத்து 3 பலம் குக்குலு 3 பலம்
வெள்ளைப்பூண்டு 1 சேர் எள்ளு 2 பலம்
வெல்லம் 6 சேர் தேன், நெய் 5 சேர்

இடித்துக்கொண்டு மேகவாய்வு, சூலைக்கட்டுக் கிராணி, வயிற்று உப்பல், பொருமல், முழங்கால் பிடிப்பு, குதிவாதம், கணு பிடிப்புகள் சகலமான ரோகங்களுக்குக் கொடுக்கவும்.

சேங்கொட்டை 10 பலம்

கெந்தகம் குக்குலு
பரங்கிப்பட்டை வாய்விளங்கம்
நீரடிமுத்து வகைக்கு 2 பலம்

சிவனார்வேம்பு நிலையாவாரை
தேவதாரம் ஆனைத்திப்பிலி
சீரகம்இரண்டும் சிறுநாகப்பூ
சதகுப்பை கடுகுரோகணி
குராசாணி ஓமம்
கடுகு வகைக்கு ¼ பலம்

வங்கபஸ்பம் 2 பலம்

நிலவேம்பு வெள்ளறுகு
கிளாப்பட்டை சங்கம்வேர்

இவை வகைக்கு ¾ பலம்

தேன், சர்க்கரை, நெய் கூட்டி பண்ணிக்கொள்ளவும். இந்த பல்லாதி, மேகம், மேக வாய்வுகள் பிடிப்புகள் முதலானது தீரும்.

**பதினெட்டுக் குட்டம், கூடிகளுக்கும், கிரந்திக்கும், பல்லாதிகை லேகியம், நுணாக்காய், கிரந்தி முகத்தில் காணுகிறதாக்கும்.**

சேங்கொட்டை ¾சேர் , நீரடிமுத்து ¾பலம், நாபி 5 வராகன், கருநாபி ¾ வராகன், எள்ளு ¾படி கார்த்திகைக் கிழங்கு 2¾ வராகன், கஸ்தூரி மஞ்சள் 1¼ பலம், பதினெட்டுக் குட்டமுந் தீரும். மேகத்துக்குக் கொடுக்க வேண்டாம். முகத்தில் காணுகிற நுணாக்காய்க் கிரந்தியும் குணமாகும்.

**வயிற்றுக்கடுப்புக்கு லேகியம்**

வரட்பூலாவேர்
மாதளைவேர்
துத்திவேர்
மாம்பட்டை
கோரைக்கிழங்கு
விருட்சிப்பூ
ஆவாரை வேர்ப்பட்டை
எலுமிச்சன்பழச்சாறு
துறிஞ்சிச்சாறு
வில்வ இலைச்சாறு
கருப்பன்சாறு
காரைவேர்
அருநெல்லிவேர்
வரட்சுண்டிவேர்
வாழைப்பூ
தென்னம்பாளை
நாவல்பட்டை
இலந்தைவேர்
கருவலங்காய்ச்சாறு
மாதளம்பழச்சாறு
முசுமுசுக்கைச்சாறு

வகைக்கு ¼ படி

கலக்கத்திரவியம்
இசுப்புகோல் பிஞ்சு
அதிவிடையம்
சிறுநாகப்பூ
புளியங்கொட்டைத்தோல்
வில்வப்பிசின்
கோரைக்கிழங்கு
வெள்ளரிவிதை
நெய்
கற்கடகசிங்கி
குராசாணி ஓமம்
கடுக்காய்
சீரகமாம்பருப்பு
சாதிக்காய்
மாதளைஓடு
ஆனைத்திப்பிலி
கல்கண்டு

இவை வகைக்கு ஒருசேர்,

இவை லேகியம் பண்ணிக்கொள்ளவும். சகலக் கடுப்புந்தீரும். இதில் முன் எழுதியிருக்கும் வேர் வகையும் பட்டை வகையும், கிழாயம் வைத்து இறுத்துக்கொண்டு பச்சிலை வகைகளை இடித்துச்சாறுபிழிந்து முன்சொன்னபடி அளந்து விட்டுக்கொண்டு, இதில் கல்கண்டு கரைத்து வடிகட்டி காய்ச்சிப் பாகுபதத்தில் லேகியம் கலக்கி திரவியப் பொடி தூவிப் பண்ணிக்கொள்ளவும்.

### பாண்டு சோகை, காமாலைக்கு அஷ்ட சிந்தாதி லேகியம்

| | |
|---|---|
| • கடுக்காய் 50 | தான்றிக்காய் 50 |
| நெல்லிமுள்ளி 25 | சுக்கு 1 பலம் |
| மிளகு | திப்பிலி |
| சீரகம் | கருஞ்சீரகம் |
| ஓமம் | இந்துப்பு |
| பெருங்காயம் | வகைக்கு 1 பலம் |
| லோகம் 4 பலம் | பசுவின்நெய் 2 படி |
| கற்றாழைச்சாறு 1 படி | ஆடாதொடைச்சாறு 1 படி |

இந்த மூன்று வகைச்சாறு விட்டு அரப்பொடியை நாலு சாமம் அரைத்துக்கொண்டு, கடைச்சரக்கெல்லா வத்திர காயம் பண்ணிக்கொண்டு, முன் மிஞ்சியிருக்கும் சாத்தில் புட்டிக் கருப்புட்டி 4 பலம் போட்டுப் பாகாய்க் காய்ச்சிப் பதத்தில் சூரணமும், அரப்பொடியும் போட்டு லேகிய பதமாய் வரும்பொழுது கொஞ்சம் தேன்விட்டு லேகியமாய் எடுத்துக்கொள்ளவும். இரண்டு வேளையும் குண்டிப் பிரமாணம் கொண்டால் தீரும்.

**தீரும் வியாதி:** பாண்டு, சோகை, காமாலை, மகோதரம், நீராம் பெருவயிறு, குடல்வாதம், இருமல், சுவாசகாசம், அனேக பித்தரோகங்கள் தீரும்.

### பாண்டுவுக்கு சிந்தாதி லேகியம்

புளியிலை 100 பலம், துருப்பிடிச்ச இரும்பு 10 பலம், கிழாயத்துத் தண்ணீர் 8 மரக்கால், வெல்லம் 20 பலம்,

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |

தான்றிக்காய் வகைக்கு 2 பலம்

| | |
|---|---|
| இஞ்சி 16 பலம் | தேன் 2 படி |
| நெய் 1 படி | லோகசிந்தூரம் 2 பலம் |

லேகியம் பண்ணிக்கொள்ளவும். பாண்டு முதல் அனேக ரோகமெல்லாம் தீரும்.

### சூசிக வாயு, கிராணி, குன்மம், பொருமல், படாதக்க அரிதகி லேகியம்

| | |
|---|---|
| வட்டத்திருப்பி | பெருமரப்பட்டை |
| கருவேப்பிலைத்தண்டு | முக்காவேளைவேர் |
| ஆயில்பட்டை | குடசப்பாலை பட்டைவேர் |
| வில்வவேர் | மாதளைவேர் |
| சாரணைவேர் | பிரண்டைத்தண்டு |

இவைகள் வகைக்கு 5 பலம்,

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| திப்பிலிமூலம் | மிளகு |
| ஓமம் | குரோசாணி ஓமம் |
| காட்டாத்திப்பூ | குடசப்பாலைவிதை |
| வாலுவுழுவை அரிசி | ஏலம் |
| கிராம்பு | இலவங்கப்பட்டை |
| சிறுநாகப்பூ | சாதிக்காய் |
| சாதிப்பத்திரி | பஞ்சலவணம் |
| கோஷ்டம் | அதிவிடையம் |
| சீரகம் | வில்வப்பத்திரி ஓடு |
| மாதளை ஓடு | விளாம்பிசின் ஓடு |
| இலவம்பிசின் | காசுக்கட்டி |

இவைகள் ¾ பலம்,

கடுக்காய் 50, காடியில் அறுபது நாழிகை ஊறப்போட்டு, உலர்த்தி, இதுவெல்லாம் தனித்தனியே வறுத்துச் சூரணம்

பண்ணிக்கொண்டு, வெட்டு மருந்துப்பட்டை எல்லாம் வறுத்து இடித்துத் தூணிப்பதக்குத் தண்ணீரிலே போட்டு நா நாழியாக காய்ச்சிக்கொண்டு இறுத்து, எருமைத்தயிர் 1 படி விட்டுக்காய்ச்சிறபோது, பழவெல்லம் 14 பலம் போட்டு பாகுபதமாய் வரும்போது, சூரணம் தூவி பசுவின்நெய், நல்லெண்ணெய் மட்டாய்விட்டு, லேகியம் பண்ணி இரண்டுவேளையும் பாக்களவு கொள்ள கார்ப்பு, புளி, தவிரவும்.

**தீரும் வியாதி:** சூசிகர வாய்வு, குன்மம், கிராணி, வயிறு பொருமல், இறைச்சல் தீரும்.

**சயரோகத்துக்கும், காசஷாணாபசாதி லேகியம்**

| | |
|---|---|
| அத்திமுள்ளி 100 பலம் | பாதிரிவேர் 20 பலம் |
| வட்டத்திருப்பிவேர் | சீந்தில்கொடி |
| ஆடாதொடை | சித்திரமுட்டி |
| போரமுட்டி | காட்டாமணக்குக்கிழங்கு |
| ஓரிலைத்தாமரை | கூத்தன்குதம்பை |
| தழுதாழை | வில்வம் |
| சித்திரமூலம் | பெரிய ஆமணக்கு |
| நொச்சி | அம்மையார் கூந்தல் |
| சிறுவழுதலை | தூதுவளை |
| குமிழ் | கண்டுபாரங்கி |
| செவியம் வகைக்கு 20 பலம், | |
| சுக்கு40 பலம் | கடுக்காய்100 பலம் |

இதெல்லாம் இடித்து, நாட்டு மரக்காலாலே 80 மரக்கால் தண்ணீர்விட்டு ஆறு பானையில் 6 நாள் எரியவிட்டு, மற்றநேரம் ஒருகட்டைபோட்டு, அனல் அவியாமல் கஷாயம் 6 நாள் போன பிறகு ஏழாம் நாள் கஷாயம் பதினாறிலே ஒரு பங்கான உடனே வடித்துக்கொண்டு, வெல்லம்-100 போட்டுக் கம்பிப்பதம் வரக்காய்ச்சிய உடனே கற்கத் திரவியம், நொச்சிக் கரிசலாங்கண்ணி, வசம்பு, மஞ்சள், இஞ்சி, ஆடாதொடை வேர், சீந்தில் சர்க்கரை, வல்லாரைச் சமூலம், அத்திவெள்ளி

வேர், எருக்கமொட்டு, வெள்ளைச்சாரணைவேர், வாய் விளங்கம், ஓமம், நல்லசீரகம், இந்துப்பு, வளையலுப்பு, கருஞ்சீரகம், பொட்டலை உப்பு, சுக்கு, சமுத்திர லவணம், பெருங்காயம், கோஷ்டம், கடுக்காய், தாணிக்காய், நெல்லிமுள்ளி, செவியம், கற்கடகசிங்கி, கண்டுபாரங்கி, தாமரைக்கிழங்கு, அதிவிடையம், கடுகுரோகணி, சித்தரத்தை, பேரரத்தை வகைக்கு 2 வராகன், இதற்கு சமன் திப்பிலி 66 வராகன், இதுவெல்லாமிடித்துச் சூரணம்பண்ணி, பாகில் போட்டு, லேகியமானவுடன் நாட்டு மரக்காலாலே தேன் குருணி விட்டுக் கிளறி பாகமா எடுத்துக்கொண்டு காலமே கொட்டைப்பாக்களவு கொள்ளவும்.

**தீரும் வியாதி:** பதினொரு வகை சயரோகமும் மற்றும் பல வியாதிகளெல்லாம் போகும்.

## பித்தம் விக்கலுக்கு நிம்பாதி லேகியம்

| | |
|---|---|
| எலுமிச்சம்பழச்சாறு | புளியிலைச்சாறு |
| முசுமுசக்கைச்சாறு | வில்வப்பத்திரிவேர்சாறு |
| கொம்மட்டிச்சாறு | இஞ்சிச்சாறு |

வகைக்கு ¾ படி,

| | |
|---|---|
| ஏலம் | இலவங்கம் |
| சீரகம் | அதிமதுரம் |
| திப்பிலி | நெல்பொரி |

சர்க்கரை வகைக்கு 4 பலம்,

தேன் 1 ஆழாக்கு, லேகியமாகப் பண்ணிக்கொள்ளவும்.

**தீரும் வியாதி:** பித்தாதிக்கம், விக்கல், குல்மம், அரோசிகம் இவை தீரும்.

## உஷ்ணவாயு, பைத்திய வாயுவுக்கு கர்பங்க வில்வாதி லேகியம்

| | |
|---|---|
| வில்வவேர் 30 பலம் | முக்காவேளைவேர் 30 பலம் |
| சங்கம்வேர் 15 பலம், | |

| | |
|---|---|
| அமுக்கிராவேர் | ஆயிற்பட்டைவேர் |
| மூக்கரட்டைவேர் | அத்திமுள்ளிவேர் |
| முசுமுசுக்கைவேர் | பெருங்காஞ்சோறிவேர் |
| முடக்கொத்தான்வேர் | பேராமுட்டிவேர் |
| தூதுவேளைவேர் | கொடிவேலிவேர் |
| சித்தமுட்டிவேர் | |
| இவை வகைக்கு 7 பலம் | |

இதுவெல்லாமிடித்துப் போட்டு, எட்டு வள்ளத்தண்டு வார்த்து, அஷ்டபாகமாகக் காய்ச்சி வெல்லம் 40 பலம் போட்டு தேன் 2 படி, இஞ்சிச்சாறு, நார்த்தம்பழச்சாறு ¾ படி விட்டு மென்பொடி, ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, தாளிசப்பத்திரி, கொத்தமல்லி, அரத்தை, கற்கடகசிங்கி, லவங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி மூலம், சீரகம், கருஞ்சீரகம், கொடிவேலி, அதிமதுரம், கடுக்காய், தாணிக்காய், நெல்லிமுள்ளி, இதுவெல்லாம் வகைக்கு 3 பலம் இடித்துச் சூரணம் பண்ணிப் பாகில் போட்டு லேகியம் பண்ணிக்கொள்ளவும்.

**தீரும் வியாதி:** உஷ்ணவாயு, வைத்திய வாய்வு குணமாம்.

### சூசிக வாய்வுக்கு சௌபாக்கிய சுண்டி

| | |
|---|---|
| சுக்கு 16 பலம் | திப்பிலி 8 பலம் |
| மிளகு 4 பலம் | கிரந்தி தகரம் 4 பலம் |
| வாய்விளங்கம் 4 பலம் | கொத்தமல்லி 3 பலம் |
| கோஷ்டம் 2 பலம் | ஓமம் 4 பலம் |
| காட்டெருமைப்பால் 2 பலம் | சீரகம் 2 பலம் |
| வெள்ளைப்பூண்டு 8 பலம் | இலவங்கப்பட்டை 2 பலம் |
| நவச்சாரம் 2 பலம் | சத்திசாரம் 1 பலம் |
| விலச்சாரம் 1 பலம் | வெண்காரம் 1 பலம் |
| பஞ்சலவணம் 55 பலம் | கார்கோளி 1 பலம் |
| மேதை 1 பலம் | இஞ்சி 1 பலம் |
| சர்க்கரை 16 பலம் | ஏலம் 1 பலம் |

இதுவெல்லாம் வறுத்து வஸ்திரகாயம் பண்ணிக் கொண்டு, தேன் 1¾ படி விட்டுக் கிளறி, சர்க்கரையும் போட்டுக் கிளறி லேகியமாய் எடுத்துக்கொண்டு இரண்டுவேளையும் துட்டு எடைக்கொள்ளவும்.

**தீரும் வியாதி:** சூசிகர வாய்வு, சன்னி, கிராணி, சுரமிதுவெல்லாம் தீரும். கசப்பு, புளிப்புத் தவிரவும்.

**வாத சிலேட்டுமங்களுக்கு அக்கினி மாந்தத்துக்கு**

தாளிசப்பத்திரி
மிளகு
செவியம்
கிராம்பு
ஏலம்
சிறுநாகப்பூ
லவங்கப்பட்டை
விளாமிச்சன்வேர்
வகைக்கு 1 பலம்,

திப்பிலிமூலம் 2 பலம்
திப்பிலி 2 பலம்
சுக்கு 3 பலம்

இதற்குச் சரி சர்க்கரைக் கூட்டிக் கடை மருந்தெல்லாம் சூரணம் பண்ணிச் சர்க்கரையும் போட்டுப் பிசைந்து ஒரு பானையில் சீலை நனைத்துக்கட்டி வெட்டுக்குள்ளே பசுவின்பால் இரண்டுபடி, தண்ணீர் இரண்டுபடி விட்டு வேகவைத்து, இறக்கி எடுத்துக்கொண்டு கையில் நெய் தொட்டுக்கொண்டு, கொட்டைப்பாக்களவு உருண்டை பண்ணி வைத்துக்கொள்ளவும். உதிரியாயிருந்தால் மருந்து வெந்த தண்ணீரை விட்டுக்கொள்ளவும். இரண்டு வேளை கொள்ளத் தீரும்.

**தீரும் வியாதி:** வாத சிலேஷ்மம், சத்திக்கிராணி, பாண்டுரோகம், மார்நோவு, சுரத்தில் பிறந்த பாண்டு ரோகமும், வாய்வில் பிறந்த மூலரோகமும், குன்மரோகமும், சலிப்பீனிசமும், உப்புசமும், இருமல், நெஞ்சு வரட்சியும் போகும்.

### பிரமை, சன்னிபாதத்துக்கு ஆபத்தாரண மாத்திரை

| | |
|---|---|
| சாத்திரவேதி | கடுகுரோகணி |
| அதிமதுரம் | ரசம் |
| சாதிலிங்கம் | நொச்சியிலை |
| அரிதாரம் | கெந்தகம் |
| வெட்டிவேர் | விளாம்பிச்சன்வேர் |
| நன்னாரிவேர் | தாம்பிரபஸ்பம் |
| சந்தனம் | பூநாகம் |

இவை வகைக்கு 3 வராகன்,

முசுறுமுட்டையில் மூன்றுநாள் இளநீரில் மூன்றுநாள் அரைத்து உளுந்துப் பிரமாண மாத்திரை பிடித்துக்கொள்ளவும். முலைப்பாலில் விட அந்தரகாசம், பிரமை, சன்னிபாதம், இவை எல்லாந் தீரும்.

### சொர்ண மாலிகை, வசந்த மாத்திரை

| | |
|---|---|
| சொர்ணம் ¾ வராகன் | முத்து 1 வராகன் |
| கெந்தகம் 1 வராகன் | நாபி 1¾ வரகான் |
| கண்டுத்திப்பிலி 1¾ வராகன் | செந்தூரம் 6 வராகன் |

இவைகளைக் கல்வத்தில் போட்டு கெங்காசலம் விட்டுப் பன்னிரண்டு சாமமரைத்த, மாத்திரைத் தட்டிக் கொள்ளவும். சயமும், சருவசுரமும் தீரும்.

### வேறு

| | |
|---|---|
| தங்கம் 1 வராகன் | முத்து 2 வராகன் |
| சாதிலிங்கம் 3 வராகன் | மிளகு 4 வராகன் |
| மடல்துத்தம் 8 வராகன் | பசுவின்வெண்ணெய்1வராகன் |
| எலுமிச்சம்பழம் 40 | |

பழரசம் விட்டு 8 நாள், 32 சாமமரைத்து 1வராகன், ஒருமாத்திரை தட்டிக் காய்ந்தபின்பு, வேளைக்கி இரண்டு குன்றிமணி எடை பாலிலாவது, வெண்ணெயிலாவது கரும்புரசம், இஞ்சிரசம் சேர்த்து சுரசத்திலாவது, தேனிலாவது

இரண்டுவேளை மண்டலங்கொடுக்க அசதிசுரம், சயம் முதலாகிய அதிசாரங்களும் அனுகூலமாம். முத்துசாமித் தீர்த்தர் பிரயோகம்.

**சகல சுரம்,சன்னி பாதத்ததுக்கு சுபாங்குச மாத்திரை**

| | |
|---|---|
| கெவுரி | வெள்ளைப்பாஷாணம் |
| குதிரைப்பல்லு பாஷாணம் | கெந்தகம் |
| அரிதாரம் | மனோசிலை |

இந்த ஆறும் கல்வத்திலிட்டு பாகலிலைச் சாற்றில் ஒருநாள் மிளகுக் கஷாயத்தில் ஒருநாள் அரைத்து அவுரிவேர்க் கஷாயத்தில் ஒருநாளிலரைத்து கடுகுப் பிரமாணம் மாத்திரை பிடித்துக்கொண்டு அனுபானங்களில் மூன்று பொழுது கொடுக்க சகல சுரமும் தீரும். சன்னிபாத முதலான வியாதிகள் தீரும். சுத்தி பண்ணிக்கொண்டு, அரைக்கவும்.

**சுராங்குச மாத்திரை சருவ சுரத்துக்கு**

| | |
|---|---|
| ரசம் | கெந்தகம் |
| மனோசிலை | அரிதாரம் |
| துத்தம் | துரிசு |
| வெள்ளைப்பாஷாணம் | |

வகைக்குச் சமன்கூட்டி பொடிபண்ணி ஒருசட்டியில் போட்டு சாரணைச் சாறுவிட்டு, அதன்மேல் வெங்கலக் கிண்ணி கவிழ்த்து, கிண்ணி வாய் சீலைமண் செய்து பிறகு மேலே சட்டி நிறைய மணல்போட்டு அடுப்பேற்றி கோவளம் விறகு கொண்டு தீபாக்கினியாய் ஒரு சாமம் எரித்துப் பார்த்தால் கருப்பாயிருக்கும் எடை சரியாயிருக்கும். எடுத்துக்கொண்டு, தக்காளிச்சாறு இரண்டு சாமம் அரைத்துப் பச்சைப் பயறுப் பிரமாணம் உருண்டைப் பிடித்து வைத்துக் கொண்டு அனுபான விசேடங்களில் கொடுக்க, சருவ சுரமும் நிற்கும். பத்தியமாய் இருக்கவும்.

**வீக்கத்துக்கு தேங்காய் மாத்திரை**

| | |
|---|---|
| அரப்பொடி | காந்தம் |
| கிட்டம் | தேங்காய் |

மருந்தை ஆறக்கப் பொடி பண்ணி தேங்காயில் இளநீரிருக்கக் குளத்தானே அதிலே இந்த மருந்தைப் போட்டுக் கண்ணையடைத்து சாணிப் பிடிப்பிச்சு தேங்காயோடு வெடிக்க உள்ளே தேங்காய் கருகாமல் பதராய்ப் புடம் போட்டு எடுத்துக்கொண்டு உள்ளே தேங்காயில் மருந்து பற்றியிருக்கிற மட்டும் சீவி எடுத்துக் கொண்டு மருந்தும் அதுவும் கல்வத்திலிட்டு கையாந்தகரைச் சாறு விட்டு, நாலு சாமமரைத்து தேற்றான் பிரமாண மாத்திரை பிடிக்கவும். சாயங்காலம் தேனில், காலமே கையாந்தகரைச் சாற்றில் கொடுக்கவும். 7 நாள் கொடுக்க எப்படிப்பட்ட வீக்கமும் போய்விடும். உப்பில்லாப் பத்தியம்.

**இங்காஷ்டகம் மாத்திரை, சகல வாய்வுக்கும், தீபனத்துக்கும்**

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கண்டுத்திப்பிலி |
| வெள்ளைப்பூண்டு | சீரகம் |

வகைக்கு 1 பலம்

| | |
|---|---|
| பெருங்காயம் | இந்துப்பு |
| கெந்தகம் வகைக்கு ¼ பலம் | |

ஓரட்டும் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து வராகனிடை அளவு மாத்திரை உருட்டிக் கொள்ளவும். சகலமான வாய்வும் போகும்.

**தோஷஞ் சகலத்துக்கும் ஆறுமுக சஞ்சீவி மாத்திரை**

| | |
|---|---|
| சாதிலிங்கம் | அதிமதுரம் |
| கோஷ்டம் | செண்பகப்பூ |
| இலவங்கப்பட்டை | ஏலம் |

இது சமனெடைக் கூட்டி முலைப்பாலில் அரைத்து மிளகுப் பிரமாணம் பிடித்து சகலத்துக்கும் கொடுக்கவும்.

### அரோசிக மாத்திரை

| | |
|---|---|
| அதிமதுரம் | கோஷ்டம் |
| நன்னாரிவேர் | ஏலம் |
| கோரோசனை | அக்கிராகாரம் |
| விலாமிச்சன்வேர் | கலங்கொம்பு |
| சடாமாஞ்சி | சந்தனம் |

இவை எல்லாவற்றையும் கோவையிலைச் சாற்றிலரைத்து மிளகு போல உருண்டைசெய்து முலைப்பாலிட அரோசிகம் தீரும்.

### விரோசனத்துக்கு உருண்டை

| | |
|---|---|
| நேர்வாளம் | கோஷ்டம் |
| அதிமதுரம் | ஏலம் |
| செண்பகப்பூ | |

இதுவெல்லாம் சமன் கொண்டு எலுமிச்சன் பழச்சாறு வார்த்தரைத்து மிளகுப் பிரமாணம் உருண்டை பண்ணிக் கொண்டு பெரியவர்கள், சிறியவர்கள் சரீரமறிந்து கொடுக்கவும். அதிகமாகக் கழிந்தால் வெந்நீரும், எலுமிச்சன் பழச்சாறும் கொடுக்கவும். கழியாவிட்டால் மிளகு நீரும், சாதமும் கொடுக்கவும். நேர்வாளஞ் சுத்திபண்ணி நஞ்சு வாங்கிப் போட்டுக் கூட்டிக்கொள்ளவும்.

### கிராணி கபாடம்

| | |
|---|---|
| பெருமரப்பட்டை | நற்மாமடிப்பட்டை |
| அரோசிகப்பூ | வில்வப்பழம் |
| ஆவாரைப்பிசின் | குசப்பாலை |
| மாங்கொட்டை | புளியங்கொட்டைத்தோல் |
| கசகசா | சீரகம் |
| வெந்தயம் | இலவங்கம் |

| | |
|---|---|
| சாதிக்காய் | சாதிப்பத்திரி |
| சிறுநாகப்பூ | ஓமம் |
| கஞ்சா | வசம்பு |
| அதிவிடையம் | கடுக்காய்த்தோல் |
| இலவம்பிசின் | காசுக்கட்டி |
| கற்கடகசிங்கி | பொன்முசுட்டை வேர் |
| பெருஞ்சீரகம் | சன்னலவங்கப்பட்டை |
| இலவங்கப்பட்டை | காட்டாத்திப்பூ |
| பருத்திப்பூ | |

இவை எல்லாம் சமன்கொண்டு, பொடி பண்ணிக் கொண்டு போசத்துக்காய்க் கஷாயம், ஆவாரை வேர்ப்பட்டைச் சுரசம், நாவல்பட்டை, சுரசம் இவைகளில் ஒவ்வொரு நாளரைத்து மாத்திரைக் கூட்டிக்கொள்ளவும். சகல கிராணியும் சகல கடுப்பும் தீரும்.

### மாத்திரை - சுவாசத்துக்கு மருந்து

இதரம் 16 வராகன், தாம்பிரபஸ்பம் 16 வராகன், கற்பூரசிலாசித்து 8 வராகன், இந்துப்பு 8 வராகன், பொரித்த வெண்காரம் 6 வராகன், எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து உருண்டை பண்ணிக்கொள்ளவும். பயறளவு கொடுக்க சுவாசரோகம், சகலமும் போகும்.

### தீபனத்துக்கு பற்பம்

சீனாக்காரம் 4 வராகன், கற்பூரசிலாசித்து 16 வராகன், பொட்டளை உப்பு 4 வராகன், இந்துப்பு 4 வராகன் இதை சேர்த்துப் புடம் போட்டுக்கொள்ளவும். நன்றாய் தீபனங் காணும்.

### அப்பிரகச் செந்தூரம்

அப்பிரகம் 2 பலம், ஊசிக்காந்தம் 1 பலம், மூன்று பலத்தையும் காடியில் மூன்றுபுடம் போட்டுக்கொள்ளவும். பிறகு எலுமிச்சம்பழத்திலே இரண்டு புடம் போட்டுக் கொள்ளவும். மூன்றுதரமும் போடலாம். அத்திப்பழம் போல்

இருக்கும். சகல சலரோகங்களுக்கும் கொடுக்கலாம். எப்பேர்ப்பட்ட நீரிழிவும் நின்றுபோகும். மதுமேகம் நிற்கும். மேலெழுதிய அப்பிரகம் நன்றாய் சிவக்கவேண்டும் போல மனசிருந்தால் முள்ளங்கிச் சாற்றில் 5 புடம், நாகப் பழச்சாற்றில் புடம்போட்டு மறுபடி எலுமிச்சம்பழச்சாற்றில் மூன்றுபுடம் போட்டால் நன்றாய் சிவந்திருக்கும். ஆக 17 புடம் போட்டுக்கொள்ளவும். இன்னமும் புடம்போட வேண்டுமானால் ஆலம் விழுதுச் சாற்றில் அஞ்சு புடம் போட்டு, மறுபடி எலுமிச்சம்பழத்தில் 3 புடம்போட்டு எடுத்துக்கொள்ளவும். ஆக 24 புடத்தில் 120 புடம் போட்ட அப்பிரக செந்தூரத்துக்கு அதிகமான குணமிருக்கும். தளுக்கு இருக்காது. முன்சொன்ன 6 புடத்தில் உள்ளுக்குக் கொடுக்கலாம். அதற்கு மேல் அதிகப்புடம் போட்டது அசிக குணமென்றறியவும்.

### வேறு

வெங்காயச்சாற்றில் 5 புடம், குல்பாசுக்கிழங்குச்* சாற்றில் இருபது புடம், எலுமிச்சம்பழச்சாற்றில் 1புடம் ஆக அன்பது புடமிடவும்.

### பதங்கம், சன்னி சுரஞ், சுவாசம், தாம்பிரக் கிண்ணி மருந்து

| | |
|---|---|
| ரசம் | கெந்தகம் |
| அரிதாரம் | மனோசிலை |

இவை வகைக்கு 1 பலம் எடுத்து நான்கையும் பொடித்துச் சட்டிக்கு நடுவே வைத்து மேலே 18 பலம் தாம்பிரக்கிண்ணங் கவிழ்த்து சட்டிக்கும் கிண்ணத்துக்குஞ் சீலைமண் பலக்கச் செய்து, நான்கு சாமம் எரிக்க தாம்பிரக் கிண்ணத்தில் ஏறியிருக்கும் கிண்ணத்தை எடுத்துத் தட்டப் பலபலவென்று அதரறாய் விழும். அதைப் பொடித்து வைத்துக்கொண்டு சன்னி சுரம் சகலத்துக்குக் கொடுக்கவும்.

### சுவாசங்களுக்கு தாம்பிரப் பற்பம், பூபதி சிந்தாமணி மாத்திரையில் சேர்கிறதுக்கு

நாகூரு சல்லி ஒன்று இருத்திக்கொண்டு ஆலங் கொழுந்து சாற்றில் மூன்று நாள் ஊறவைத்து அப்பால் எலுமிச்சம்பழச்சாற்றில் 90 நாழிகை ஊறவைத்து, எடுத்துக் கொண்டு 2 படி வெள்ளறுகுச் சமூலம் வெள்ளைக்கரு விட்டு, அரைத்துக் கவசாப் கட்டி வெய்யிலில் உலர்த்தி குகையில் வைத்து, சீலைமண்ணுஞ் செய்து குகை, அழுக ஊதி எடுக்கவும். பிறகு எருமைத்தயிர், ஆடையோடே விட்டரைத்து ஆனைக்கல் நடுவே வைத்து சீலைமண்ணுஞ் செய்து புடம்போட்டுக் கொள்ளவும். நன்கு வெண்மையாயிருக்கும்.

### வேறு

சுவாசத்துக்குக் கொடுக்கவும். பூபதி சிந்தாமணிக்கு இந்த பற்பம் போடலாம்.

### சகல மேகத்துக்கும் வங்க பற்பம்

வெள்ளீயம் 4 பலம், தகடு கட்டிக்கொண்டு கோழிமுட்டை ஓடு, பலம் 20 பொடிசெய்து, பாதிப்பொடி புதுச்சட்டியில் போட்டு தகடு பற்பம், இரண்டு முட்டை வெள்ளைக்கருவிட்டு அதின்மேல் பாதிப்பொடி போட்டு மூடி ஏழு சீலைமண் செய்து, பத்து சாமம் கோவளம் விறகு கொண்டு கோடாக்கினியாக எரிக்கவும். பற்பமாம். அனுபானத்தில் சகல வியாதிக்கெல்லாம் கொடுக்கவும். சாறு வராதப் பச்சிலைக்கு இந்தப் பற்பம் கொஞ்சம் போட்டு பிழிஞ்சுக்கொள்ளவும்.

### மேகத்துக்கு தாது விருத்திக்கு கருவங்கப் பற்பம்

சாதிலிங்கம் 1 பலம், எந்த விதமாகிலும் கட்டிக் கொண்டு, காரீயம் 1 பலம் இரண்டையுஞ் சேர்த்துக்கொண்டு

கரு ஊமத்தை இலைச்சாறுவிட்டு நாலு சாமம் அரைத்து வில்லைப் பண்ணி சட்டியில் வைத்து நாலு சாமம் முத்தீயுமெரித்து பின்னும் எடுத்து ஊமத்தையின் சாறுவிட்டு, நாலுசாமம் அரைத்து மறுபடி நாலு சாமம் எரித்து எடுத்துக்கொண்டு வீரியத்துக்குக் கொடுக்கவும். மேகத்துக்கு கொடுக்கவும்.

**மேகத்துக்கு மூத்திரம் கட்டினது சுவாசம் சயத்துக்கு சகல வியாதிக்கு நாகபற்பம்**

நாகம் 2 பலம், நன்றாய் 21 தரம் சுத்தி பண்ணிக்கொண்டு சுத்திபண்ணின நாகம் 2½ பலம் சுத்திப்பண்ணின ரசம் 1 பலம் விட்டு தொந்திச்சு, ஒட்டுப்புல் சாறுவிட்டு நாலு சாமமரைத்துப் பின்பு எழுத்தாணிப்பூண்டு எனப்பட்ட செவுரு முள்ளங்கிச்சாறுவிட்டு நாலு சாமம் அரைத்து, உருண்டையாக்கி, நீள உருண்டையாக்கி இருப்புக் குகையில் வைத்து, இருப்பு அகலிலிட்டு சீலைமண் செய்து அடுப்புக்குள் 30 நாள் புதைத்து மறுபடி எடுத்து செவுரு முள்ளங்கிச்சாறு விட்டு, நாலுசாமம் அரைத்து வில்லைத் தட்டிச் சட்டியில் வைத்து, சட்டிகொண்டு மூடி சீலைசெய்து, முத்தீயாக எரித்து நாலு சாமம் பதமாக எரிக்கப் பற்பமாகும். சகல வியாதிக்கும் கொடுக்கவும். மேகம், மூத்திரக்கட்டு, சுவாசம், சயம் அனுகூலமாகும்.

**சருவ சுரத்துக்குக் காரீய செந்தூரம்**

| | |
|---|---|
| காரீயம் | ரசம் |
| கெந்தகம் | சாதிலிங்கம் |
| கெவுரி | பொரித்த வெண்காரம் |

வகைக்கு 1 பலம், செருப்படிச்சாறு விட்டு, நாலு சாமமரைத்து, பிறகு எலுமிச்சம்பழச்சாறுவிட்டு, நாலு சாமமரைத்து, முப்பதுநாள் அடுப்பில் இருப்புச் சிமிழில் வைத்து வெகுபுடம் போட்டுப் பார்த்தால் செந்தூரமாம். சருவ சுரமும் நிற்கும். வேதையும் காணும்.

### சகல உபத்திரவங்களுக்கு நாகசெந்தூரம்

| | |
|---|---|
| துத்தநாகம் | ரசம் |
| கெந்தகம் | சாதிலிங்கம் |
| கெவுரி | பொரித்த வெண்காரம் |

இந்த மருந்துகளைக் கல்வத்திலிட்டு, ஓட்டுப்புல் நாலு சாமம், எழுத்தாணிப் பூண்டு, நாலு சாமம் சாறு வார்த்தரைத்துக் கைமுறையாய் சிவக்க மட்டும் புடம் போட்டுக் கொள்ளவும். புடத்துக்கெல்லாம் மேலெழுதிய மூலிகை இரண்டும் சாறுவிட்டரைத்து வில்லைக் கட்டி புடமிடவும். செந்தூரமான பிறகு அனுபானத்துடனே சகல உபத்திரவங்களுக்கு கொடுக்கவேண்டியது.

### சகல மேகத்துக்கும், மிருதார்சிங்கு செந்தூரம்

மிருதார்சிங்கு வேணுமென்றது கொண்டு வந்து, நறுக்கி தேனில் 3 நாள் ஊறவைத்து, உருக்கிச் சாய்க்க ஈயம் விழும். அதை எடுத்துச் சட்டியில் போட்டுக் கண்டங்கத்தரி, பொய்த்தலையும், புரசன்பூ இது மூன்றும் போட்டு, வறுக்க செந்தூரமாகும். சகல மேக விரணமுந் தீரும்.

### சகல ரோகத்துக்கு லகு அயவங்கச் செந்தூரம்

அரைப்பொடி 1 பலம், கிளாசு 1 பலம், வளையலுப்பு 1¾ பலம், வெண்காரம் 1 பலம், வெள்ளைக்கரு விட்டரைத்து வில்லைப் பண்ணிக்கொண்டு, காயவைத்துக் கையில் அடைத்து அஞ்சு சீலை செய்து, காய்ந்தபின் உலையில் வைத்து அழுக ஊதியாறவைத்து, மறுபடி அழுக ஊதி இப்படி 5 தரம் ஊதி ஆறின பின், உடைத்தெடுக்க அடியில் வட்டுப்போல சத்து இறங்கியிருக்கும். அதையெடுத்து வைத்துக்கொண்டு சாரம் ¾ பலம், தாளகம் ¼ பலம், வெண்காரம் ¼ பலம், வீரம் ¾ பலம் இவைகளைப் பழச்சாறு விட்டரைத்து இதனால் சத்தை சோதித்து விளக்கெண்ணெயில் காய்க்க ஈயமாகும். இந்த ஈயத்துக்கு பாதி கெந்தகம், இந்த ஈயத்துக்குச் சமன்எடை ரசம் சேர்த்தத் தாளகம் நாலத்தொன்று,

மனோசிலை எட்டிலொன்று, பூனீறு வராகன் 1, இந்த மருந்தெல்லாம் கன்னிச்சாறு பொய்த்தலைச்சாறுவிட்டு நாலு சாமமரைத்து மணல் மறைவில் மூன்றுபுடம், வெளிபுடம் மூன்றுபோட்டுச் சிவக்க மட்டும் புடம் எடுத்துப் பதனம் பண்ணி சகல ரோகத்துக்கும் கொடுக்கலாம். குணமாகும்.

**மருந்துகளில் சேர்க்கப் பாஷாணச் சத்துப் பற்பம்**

வெள்ளைப் பாஷாணம் 3 வராகன், ரசம் சவுக்காரம் 3வராகன் இவை மூன்றையும் முலைப்பாலில் விட்டரைத்து சட்டிக்கு நடுவே வைத்து தாம்பிரக்கிண்ணிக் கவுத்து மேலே மணல்கொட்டி அடுப்பிலேற்றி வெகுதீயாயெரித்து சாமமான பின்ஙெடுத்து திறந்து பார்த்தால் பதங்கமிருக்கும். அதை எடுத்துக் காரமிட்டு உருக்க, சத்தாய் நிற்கும், சட்டிக்குக் கிண்ணம் கவுக்கவே வரம்பு கட்டிக்கொள்ளவும். இந்தச் சத்து பாஷாணங்கூட்டு இடங்களில் அந்த இடைக்கிந்த சத்து சேர்க்க அதிக குணமாகும்.

**சூலைக்குப் பாஷாணமுறைப் பற்பம்**

ஒரு சட்டியில் விரல்கடை மணல்போட்டு, அதின் மேலே வட்டுப் போலே ஒரு ஓடுவைத்து அதின்மேல் படல் சுருளாக வைத்துப் பாதிக்கு எவட்சாரம், பொட்டள உப்பு, இரண்டும் பொடிபண்ணிப் பாதி பொடி ஓலைச்சுருளில் போட்டதின் மேலே வெள்ளைப்பாஷாணம் 1 வராகன் வைத்து அதின்மேலே முன்பாதிப் பொடியை மேலேப் போட்டு சட்டி நிறைய மணல்போட்டு, அடுப்பேற்றி தீபாக்கினி, கமலாக்கினியாக இரண்டு சாமமெரித்து எடுத்துப் பார்த்தால் நடுவில் வெள்ளையாயிருக்கும் எடுத்துக்கொண்டு தேனிலரைப் பண எடை இடசூலை, இருவத்திரண்டும், குன்மம் எட்டு, வாதம் 80ம் குணமாம். அவிழ்தம் கொடுக்கிறது மூன்றுநாள் ஆறுபொழுது கொடுக்கிறது. கார்ப்பு, புளிப்புத் தவிரவும்.

## சகலரோகத்துக்கும் வங்கக்குரு செந்தூர போக்கு

வங்கம் 1 வராகன், தகடுதட்டி, அரிதாரம் 3 வராகன், எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து அதில் வங்கத்தகட்டைப் போட்டுப் பிசறி குகையில் வைத்து இருபது வரளியில் புடம்போடப் பற்பமாம். இந்தப் பற்பம் எடைக்கிடை வெள்ளித்தகடு தட்டிப் பசபாபத்தில் எலுமிச்சம்பழச் சாற்றினால் பிசறி இருவது வரளியில் புடம்போடப் பற்பமாகும். இந்தப் பற்பத்துக்கு எவ்வளவு ரசம் உருளுதோ அவ்வளவு வரைக்கும் ரசம் விட்டு பிறகு அந்தக் குளிகையை ஊமத்தங்காயில் 21 புடம் போட மணியாகும். பின் சாரணை ஏத்தி செந்தூரித்துக் கொண்டால் எந்த ரோகத்துக்குக் கொடுத்தாலும் குணமாம்.

## சகல ரோகத்துக்கு வெடியுப்புச் சுண்ணம், செந்தூரப்போக்கு

பொட்டளை உப்பு 5 பலம், புளி 5 பலம், இவை இரண்டும் ஒன்றாய் மைபோலே துணியிலேத்தித் திரியிலே கொழுத்திப் பிடிக்க இந்து விழும். அதை பீங்கானில் வைக்க நீராம், சீனக்காரம் 5 பலம் அந்த நீரிலே போட்டரைத்து உண்டைபண்ணி காயவைத்து புடத்தில் போட அக்கினிக்கு கட்டுப்பட்டிருக்கும். அதை கல்வத்தில் பொடிபண்ணி பீங்கானில் வைத்துப் பனியிலாகுதல், சாணத்திலாடுதல் வைக்க நீறாம். அந்த செயநீரை அந்த நீறு நால்ரசமத்திக்கக் குளிகையாம்.

**வேறு:** குளிகைக்கு செந்தூரித்து சகலரோகத்துக்கு கொடுக்கக் குணமாகும்.

## சரக்குக் கட்டப்பூ நாகச் செயநீர்

துரிசு 1 பலம், இந்துப்பு 1 பலம், சூடன் 1 பலம், சீனம் 1பலம், கல்லுப்பு 1 பலம், நாலாகக் காய்ச்சி, வெடியுப்பு 4 பலம், புளி 8 பலம் இவை சுண்ணம்பண்ணி பூநாகம் நாலுக்கொன்று போடத் தண்ணீராம். மூன்று நாளைக்குள்

கள்ளிப்பழுப்பு சாம்பல், நாயுருவி சாம்பல் இதில் உப்பு எடுத்துக்கொண்டு பூநாகத்தில் போடச் செயநீராம். இந்தச் செயநீர் சரக்குகளுக்கு சுருக்கங் கொடுக்க சரக்குக் கட்டும் சுத்தியாம்.

## அக்கினி மாந்தியத்துக்கு சுயமாக்கினி

ரசம் 4 பலம், மனோசிலை 2 பலம், கெந்தகம் 8 பலம், காந்தம் 16 பலம், இரும்பு அரைபொடி 32 பலம், இவைகள் கல்வத்தில் சேர்த்துக் கற்றாழைச்சாறு விட்டு, மலர் மருந்து நேகவரைத்து வெயிலில் வைத்து புகைச்சல்கண்டு, சூடு கண்டு, தணிஞ்ச பிறகு மெல்லிசாய், பொடி செய்து குப்பியில் அடைத்து வைத்துக்கொண்டு பணவிடை வீதம் இரண்டு வேளையும் மண்டலம் கொடுக்க சகல வாயுவுந் தீரும்.

## வேறு (இன்னுமொரு முறை)

ரசம் 32 பலம், மனோசிலை 16, கெந்தகம் 8 பலம், காந்தம் 2 பலம், இரும்பு அரைப்பொடி 4 பலம், இந்த எடையாய் மருந்து சேர்த்து முன்போலே கற்றாழஞ்சாறு விட்டு, அரைத்து முன்போலே வெயிலில் வைத்து பொடிபண்ணி குப்பியில் அடைத்து ¾பணவெடை இரண்டுவேளையும் கொடுக்க சன்னி முதலாய் திமிர்வாயு 80வாதமும் தீரும். (பரங்கிப்பட்டைலி வைத்தியர்) வெகு சுருக்காய் அனுகூலமாகும்.

## அக்கினி மாந்தத்திற்கு சுயமாக்கினி

| | |
|---|---|
| காந்தம் | அரைப்பொடி |
| கிட்டம் | சங்குக்கடல் நுரை |
| நவட்சாரம் | வெண்காரம் |
| கல்நார் | கெந்தகம் |

கற்றாழஞ் சாறுவிட்டு 12 சாமம் அரைக்க சுயமாக்கினியாம். அக்கினிமாந்தம் தீரும்.

**சுவாச குடோரிப் பற்பம்**

வெள்ளைப்பாஷாணம், சவ்வீரம், ரசம், கெந்தகம் வகைக்கு 1 பலம், கோடகசாலை சாற்றிலரைத்துத் தாம்பூரத்தில் கிண்ணி நாலு பலத்தில் பண்ணி மருந்தை சட்டியில் வைத்து தாம்பிரக்கிண்ணம், அதன்மேல் சீலைமண் செய்து,சட்டி ரொம்ப உழமண் இட்டு, எட்டுசாமம் எரித்து, ஆறியபின் எடுத்து உழமண்ணை உபாயமெடுத்துப் போட்டுப் பார்த்தால் கிண்ணமும் மருந்தும் ஒன்றாய் சேர்ந்து நீறியிருக்கும். இப்படியும் பண்ணலாம். இதுவுமல்லாமல் மருந்தை எல்லாம் கிண்ணத்துக்குள்ளே அடைத்து மேல்மூடி தாம்பிரத்தினாலே வில்லைப்பண்ணி மேலே மூடி சீலைமண்ணுஞ் செய்து ஒரு சட்டியில் கீழே உழமண்ணு இரண்டு விரல்கடை போட்டு, அதின்மேல் கிண்ணம் வைத்து கீழுமேலும் உழமண்ணிட்டு எட்டு சாமம் எரிக்கவும். அதை எடுத்தால் கிண்ணமும் அவுழ்தமும் நீறியிருக்கும். அதை மறுபடி எடுத்து சிமிளும் வைத்து அவிழ்தமும் இரண்டையும் முந்தின சாறுவிட்டு நாலு சாமமரைத்துப் பொடி பண்ணி குப்பியிலடைத்து நாலு சாமம் எரித்தால் செந்தூர மாயிருக்கும். ஒரேபொழுது சுவாசத்துக்கு வேதையுங் காணும். அனுபானந் தேனில் கொடுக்கவும்.

**பூபதி சிந்தாமணிக்குப் போடுகிறது, தாம்பிரப் பற்பம், சகலரோகத்துக்கு**

தாம்பிரம் அரைப்பொடியாய் ராவினது 1 பலம், பாகலிலைச்சாறு 8 படி, ஒரு குடத்தில் போட்டு அரை பொடியும் போட்டு சட்டி மூடி சீலைமண்ணுஞ் செய்து ஆவாரம்விரகால் பனிரெண்டு சாமம் எரிக்கப் பற்பமாகும். சகல ரோகத்துக்கும் கொடுக்கவும். அதைச் சுற்றிலும் சுரச பற்பமிருக்கும். அதையும் எடுத்து கையாடலாம். தாம்பிர பற்பம் போடச் சொல்லுகிற உள்ளுக்குக் கொடுக்கிற அவுஷத பிரயோகங்களுக்கு இந்த தாம்பிரப் பற்பம் போடலாம்.

## வாதங்களுக்குப் பிடிப்பிக்கத் தைலம்

| | |
|---|---|
| ரசம் | கெந்தகம் |
| நேர்வாளம் | கெவுரிப்பாஷாணம் |
| மனோசிலை | தாளகம் |
| சாதிலிங்கம் | மிர்தார்சிங்கு |
| நாபி இவைகள் வகைக்கு 3 வராகன் | |
| வசம்பு பலம் | ஓமம் 1 பலம் |
| வேப்பெண்ணெய் 2 சேர் | |

இவைகள் ஊமத்தன் சாறு விட்டரைத்து சீலையிலூட்டிக் காயவைத்து சுடர்தைலமிறக்கிக் கொள்ளவும். பிடிப்பிக்கவும். வாதங்களெல்லாம் அனுகூலமாகும்.

## வாதங்களுக்குப் பிடிப்பிக்க தைலம்

| | |
|---|---|
| விளக்கெண்ணெய் ¼சேர் | நல்லெண்ணெய் ¼சேர் |
| வேப்பெண்ணெய் சேர் | வசம்பு ¾ பலம் |
| உள்ளி ¼ பலம் | கருஞ்சீரகம் ¼பலம் |
| கார்த்திகைக்கிழங்கு ¼பலம் | வேலிப்பருத்தி இலைச்சாறு 1சேர் |

எரித்துப் பிடிப்பிக்கவும்.

## இருமல், சுவாசம், பழஞ்சுரத்துக்கு அரக்கெண்ணெய் தைலம்

கொம்பரக்கு 10 பலம்

| | |
|---|---|
| அரத்தை | தேவதாரம் |
| நெல்லிமுள்ளி | அகில்கட்டை |
| சந்தனக்கட்டை | விஷ்ணுக்கிரந்தி |
| சீந்தித்தண்டு | பேராமுட்டி |
| சிற்றாமுட்டி | நன்னாரிவேர் |
| முத்தக்காசு | அமுக்கிராவேர் |
| வெருகன்கிழங்கு | மறள்கிழங்கு |
| நெய்ச்சட்டிவேர் | தண்ணீர்மிட்டான் |
| தாமரைவளையம் | வெட்டிவேர் |

| | |
|---|---|
| நிலப்பனங்கிழங்கு | விலாமிச்சன்வேர் |
| கூத்தன் குதம்பை | |

இவை வகைக்கு 5 பலம், இவைகள் கஷாயம். இனிமேல்,

| | |
|---|---|
| கற்கத்திரவியம் | ஏலம் |
| இலவங்கப்பட்டை | செண்பகப்பூ |
| கோஷ்டம் | கடுகுரோகணி |
| அதிமதுரம் | கருஞ்சீரகம் |
| கஸ்தூரி | மஞ்சள் |
| பெருஞ்சீரகம் | செருநாகப்பூ |
| செவ்வல்லிக்கொடி | பெருங்குரும்பை |
| சதகுப்பை | ஆலாத்திக் கற்பூரம் |
| சாம்பிராணி | சடாமாஞ்சில் |
| பூலான்கிழங்கு | தேவதாரம் |

இவை வகைக்கு ¼பலம்

| | |
|---|---|
| சாதிக்காய் 1 வராகன் | கிராம்பு 1வராகன் |
| கோரோசினை 1 வராகன் | பசுவின்தயிர் 1 படி |
| தண்ணீர் 1 படி | நல்லெண்ணெய் 1படி |

இவை எல்லாம் எண்ணெயில் கூட்டி எரித்துக்கொண்டு முழுகவும். உள்ளுக்கும் கொடுக்கவும். மேலுந்துவளை இடவும்.

**தீரும் வியாதி:** இருமல், சுவாசம், அசதி சுரம், அநேக உஷ்ணம் இவை உஷ்ணமிவை தீரும்.

***பத்தியம்:*** முழுகின தினம் கார்ப்பு, புளிப்பு விட்டு விடவும்.

### பீனிசம், சுவாச தைலம்

நொச்சி, கருநொச்சி, எருக்கன் பழுப்பு, பேய்ப்பீர்க்கு, பசுமஞ்சள், பருத்திஇலை, ஆதண்டை இலை வகைக்குச் சாறு நாழி, அரத்தை, செறுதேக்கு, செவியம், ஆயில்பட்டை,

வெள்ளைப்பூண்டு வகைக்கு 2 வராகன், நல்லெண்ணெய் 4சேர், விட்டெரித்துக்கொண்டு முழுகினால் தீரும் வியாதி, சுவாசகாசம், நீர்ப்பீனிசம்,தும்மல், சிரசிலுண்டான ரோகங்களாகும்.

**நேத்திரரோகம் 96க்கு இமத்தைலம்,தொன்வடகப்படி**

| | |
|---|---|
| பொன்னாங்காணிச்சாறு | சிறுகீரைச்சாறு |
| சீந்தில்சாறு | பால் |

நார்த்தம்பழச்சாறு இவை வகைக்கு ¾படி,

| | |
|---|---|
| கோரைக்கிழங்கு | கோஷ்டம் |
| அதிமதுரம் | ஏலம் |
| செண்பகப்பூ | கிராம்பு |

இவை வகைக்கு 2 வராகன்,

நல்லெண்ணெய் 1 படி

இவையெல்லாம் அரைத்துக் கரைத்து வடித்து மெழுகு பதஞ்செய்து வடித்து எட்டு நாளைக்கு ஒருதரம் முழுகவும்.

**தீரும் வியாதி:** கண்ணைச்சேர்ந்த 96க்கும் அப்பிஞ்ஞனம் பண்ணலாம்.

***பத்தியம்:*** புளி, மோர், பால் அன்றைய தினம் தள்ளவும். அரப்பு, சீயக்காய் முழுகவும்.

**சகல வியாதிக்கு, காமாலை, சோகை, பாண்டு, செம்பீரக்கடுகு**

| | |
|---|---|
| சீரகம் | கருஞ்சீரகம் |
| கடுகுரோகணி | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| அசமதாகம் | கிட்டம் |
| இந்துப்பு | கல்லுப்பு |
| சீனக்காரம் | சவுக்காரம் |
| வெண்காரம் | பெருங்காயம் |
| சாதிக்காய் | கிராம்பு |

வெள்ளைப்பூண்டு வகைக்கு ¾ பலம்

இவை எல்லம் வெள்ளாட்டுக் கோமியத்தில் அரைக்கவும். காட்டுமல்லிகை, கையாந்தகரை, கீழாநெல்லி, நொச்சி, மணத்தக்காளி வகைக்கு சாந்து, எலுமிச்சங்காயளவு சாந்து கூடப்போட்டுக்கொள்ளவும். எல்லாமொன்றாய் அரைத்து ரசம் 2 வராகன், குப்பைமேனிச்சாறு வார்த்தரைத்து முறித்துமொன்றாய் சேர்த்தரைத்துக் கொண்டு எலுமிச்சம் பழம் 20 கொண்டுவந்து பழமொன்றாய் நாலாய்க்கீறி மருந்தெல்லாம் அந்த ஐந்தாவது பழத்தில் அடைச்சு ஒரு கலசத்தில் போட்டு மேலே சட்டிபோட்டு மூடி பசுவின் கோமியம் விழுகிற இடத்தில் மூன்றுநாள் புதைத்து, நாலாநாள் எடுத்து காட்டுமல்லிகைச் சாறு இரண்டுபடி விட்டு அடுப்பிலேற்றிச் சாறு சுவற எரித்தெடுத்து அம்மியிலே வைத்து அரைத்துத் தேனில் குழப்பி ½மண்டலங்கொள்ள மகோதரம், பாண்டு, காமாலை, சோகை, நீராம்பல், கோடல் வாதம், வாயுவு, குன்மம் சகல வியாதியும் குணமாகும்.

### வேறு

கார்ப்பு, புளிப்புத்தவிரவும். உப்பு வறுத்து கூட்டிக்கொள்ளவும்.

### அஷ்ட குன்ம முதலானதுக்குத் தும்மட்டிக்கடுகு

| | |
|---|---|
| பேய்த்தும்மட்டிச்சாறு ¾படி | பிரண்டைச்சாறு 1படி |
| பஞ்சலவணம் ¾பலம் | கருஞ்சீரகம் ¼பலம் |
| தேன் ¾சேர் | |

சாறுவகை இரண்டும் ஒருசட்டியில் விட்டு அடுப்பில் வைத்தெரிக்கக் குழம்பாய் வரும்போது கடைச்சரக்குப் பொடிபண்ணிப் போட்டுக் கிண்டிப் பதமாய் வரும்போது தேன்விட்டு லேகியம் போலே எடுத்துக்கொள்ளவும். இரண்டு வேளையும் பாக்களவுக்கொள்ளவும்.

**தீரும் வியாதி:** அஷ்டகுன்மம், குடல்வாதம், மகோதரம், பெருவயிறு, அக்கினி மாந்தியம், கபரோகங்கள், சுவாசங்கள், வயிற்றில் பிறந்த கட்டிகள் இவைகள் தீரும்.

### சுரத்துக்கு விருகன் கிழங்கு கடுகு

விருகன்கிழங்கு ¼ பலம், மிளகு ¾ பலம், வெதுப்படக்கி, அரைத்த சாந்து நாரத்தங்காயளவுப் புட்டி, வெல்லம் 1 பலம், நெய் ¾ சேர், இதைக் கடுகு பண்ணி கொடுத்துப் புளி, பசுவின்மோர் கூட்டிக்கொள்ளவும். அஸ்திசுரம், சீதசுரம் தீரும்.

### வேறு

கடுகுப்பண்ணுகிற விதம் எப்படி என்றால் ஒரு சட்டியில் இரண்டுசேர் பசுமோர் விட்டதில் மேல் சொல்லிய வெதுப்படக்கி, விருகன்கிழங்கு, மிளகு, மூன்றும் போட்டு, அடுப்பேற்றி மெல்லியதாய் எரித்து எல்லாம் வற்றின உடனே சரக்கு மூன்றும் எடுத்து அம்மியில் வைத்தரைத்து புட்டி வெல்லம் கூட வைத்தரைத்து அரைத்த மருந்தை எடுத்து ஒரு சட்டியில் போட்டு, 1/8 சேர் நெய் விட்டு அடுப்பில் வைத்து வெகுதீயாய்ப் போட்டு கரண்டியினால் மத்தித்துக் கிண்டி கொடுத்து பதனாய் முருகாமல் எடுத்துக்கொண்டு இலந்தைப்பழம் அளவு இரண்டுவேளையும் கொடுத்து, சுரத்துக்கு புளிமோர் கூட்டினாலும் சுரம் நின்றுபோகும். சுரம் சுத்தமாய் நின்றால் மருந்து நிறுத்தவும்.

### மலட்டு வலிக்குக் கடுகு

பிரண்டை நடுத்துண்டு இடித்தச்சாறு ¾ படி, பிரண்டைக் கொழுந்து ¾ படி அரைத்துச் சாறுடனே கூடப்போட்டு,

| | |
|---|---|
| மிளகு | சுக்கு |
| வசம்பு | வெள்ளைப்பூண்டு |
| ஓமம் | சீரகம் |
| கடுகு | நாய்க்கடுகு |

இவை வகைக்கு ¼ பலம்,

இந்துப்பு 2 வராகன், ஆனைத்திப்பிலி 2 வராகன், இடிச்ச சாறுடனே கூடப்போட்டு, அழக்காய்க் காய்ச்சி அதிலே

தலைவடிச்சாராயம் அரைப்படி விட்டு,விட்ட உடனே தீப்பற்றும் அமரச்சட்டியிலிட்டு, மூடிப்போடவும். பிறகு எடுத்து வைத்துக்கொண்டு காலமே காலமே ஒரு சிரங்கை இறுத்துக் கூட்டவும். கடுகிலே கொஞ்சம் தின்று வரவும். மிஞ்சின கடுகு உலர்த்தி வைத்துக்கொண்டு, வேப்பங் கொழுந்து, மிளங்கொழுந்து, உலத்தின மருந்து பாக்களவு போட்டு மாதவிடாய் வந்த மூன்று நாளும் கொடுக்கவும்.

**கால், கையெரிவுக்கு**

இலந்தை இலை, கருவ இலை, சீயக்காய் இலை, நெல்லி இலை, முசுமுசுக்கை இவைகளையிடித்து, குளுமையாயிருக்கிற தண்ணீர் கொண்டுவந்து, ஒரு பானையில் போட்டு, ராத்திரி வைத்துக் காலமே தண்ணீரை மத்துக்கொண்டு கடைந்தால் மேலே நுரையும், வெண்ணெய் போலே வரும். அதை வாரி, கால், கையில் பூசவும். இப்படி மூன்றுநாள் பூசவும். இந்த பச்சயிலைச்சாறு வாங்கிப் பசுவின் பாலில் விட்டுக் காய்ச்சி வெண்ணெயை எடுத்து அந்த வெண்ணெயும் பூசவும். பித்தத்தினால், மேகத்தினால் எரிவு நிற்கும்.

**வங்குக்கு**

இலந்தைக்கொட்டை 2 வராகன், திப்பிலி 2 வராகன், மஞ்சள் 4 வராகன் தேனிலரைத்துப் போடவும். வங்கு மாறிப் போமென்று அறியவேண்டியது.

**பதினெட்டு குட்டத்துக்கு கெந்தக மெழுகு**

கெந்தகம் 1 சேர், கையாந்தகரையில் மூன்று தரம் உருக்கிச்சாய்க்கவும். குப்பைமேனியில் மூன்றுதரம் உருக்கிச் சாய்க்கவும். தாழை விழுதில் மூன்றுதரம் உருக்கிச் சாய்க்கவும். உருக்குகிறபோது பசுவின் நெய் குத்தி உருக்கிக் கொள்ளவும். வேறே வைத்துச் சாய்க்கிறது. சாய்க்கிறபோது ஒவ்வொரு சாறு மூன்றும், மூன்றுபங்கு பண்ணிக்கொண்டு

சாய்க்கவும். சாய்த்த சாறு மருகா வீசிப்போடவும். வீசிப்போட்டு ரெண்டான பங்குச் சாற்றில் உருக்கிச் சாய்க்கவும். பிறகு தாழை விழுதுச்சாறு ¼படி, வெங்காயச் சாறு ¼படி, இரண்டு சுருக்கம் கொடுத்துக்கொள்ளவும். பிறகெடுத்து கல்வத்தில் போட்டு தேன்விட்டு மெழுகு பதமாய் எடுத்துக்கொள்ளவும். நன்றாய்ப் பதமாய் அரைத்து எடுத்துக்கொள்ளவும். குட்டம் பதினெட்டும் மிளகுப் பிரமாணம், மண்டலம் கொள்ளத் தீரும்.

### சுரத்துக்கு பஞ்சரெத்தின மெழுகு

லோகச் செந்தூரம், தாளகச் செந்தூரம், கட்டினப் பாஷாணம், சாதிலிங்கம், ரசச் செந்தூரமிது சமன்கொண்டு, இதற்கு சமன் கற்கண்டு போட்டு, சுண்ணாம்பு தெளிவு வார்த்தரைத்து முலைப்பாலிலரைத்து, ரெண்டாவது அரைத்து, நெய், தேன், சேர்த்து அரைத்து மைபோலே எடுத்துக்கொண்டு சகலமான சுரத்துக்கும் மூன்றுபொழுதில் பத்தியம் போட்டுக் கொடுக்கலாம்.

### அண்டவாதத்துக்கு மருந்து மெழுகு

கழச்சிவிதை,வெண்குன்றிமணி, முடக்கொற்றான், எருக்கன்விதை, காட்டுக்கொள்ளு இவைகள் சமபலமாய் நிறுத்துக்கொண்டு, கல்லுரலிலிடித்து விளக்கெண்ணெய் விட்டு மெல்லிசாயரைத்து, கல்வத்திலிட்டு அரைத்து கொட்டைப்பாக்களவு மூன்று நாளைக்குக் கொடுத்து உட்கொள்ள,உப்பில்லாப் பத்தியம் வைத்துக் கொடுத்தால் அண்டவாயு, அண்டவீக்கம் தீர்ந்துபோகும். அண்டத்தில் வீக்கமிருந்தால் கழற்சி இலை நறுக்கி வறுத்திடவும். ஒத்திடம் கொடுக்கவும்.

### சகல விஷரோகத்துக்கு விஷபூபதி மை

ரசம், கெந்தகம், நாபி, நேர்வாளம், கடுக்காய், பூவந்திக்கொட்டை, சமன்கொண்டு வேப்பெண்ணெய்

விட்டு மைபோலே அரைத்து எடுத்துக்கொள்ளவும். சகல விஷமும், சகல ரோகமும் போம்.

### மாறல் சுரத்துக்கு திருவிக்கிர மை

ரசம், கெந்தகம், வெள்ளைப்பாஷாணம், அரிதாரம், நாபி, நேர்வாளம், கொட்டாங்கச்சி கறிவகைக்கு 2 வராகன், தேங்காய்ப்பால் விட்டு நாலு சாமமரைத்து மைபண்ணிக் கொள்ளவும். இந்த மை பேதிக்குக் கொடுத்தால் நாலுநாள் மாறல், எட்டுநாள் மாறல், 15 நாள் மாறல், ஆறு மாதைய சுரமிவையெல்லாம் தீரும். 8 நாளைக்கு ஒருதரம் பேதிக்குத் தப்பாமல் கொடுத்துக்கொண்டு வரவும். மற்ற வியாதி களுக்கும் லவுங்கப்பட்டை பேதிக்குக் கொடுக்கவேண்டிய காலத்திலிருந்த மையை சரீரமறிந்து பேதிக்குக் கொடுக்கவும். மாறல் சுரத்துக்குக் கை கண்டது.

### கபால சூலை புண், பல்நோவுக்கு

சாதிலிங்கம் 1 வராகன், அரிதாரம் 2 வராகன், துரிசு 1 வராகன் இவற்றை வேலிப்பருத்திச் சாறு இவைகளினாலு மரைத்து, நாலு சாமமரைத்து, இரண்டு சாண் நீளம் சீலை கிழித்து சவுக்கமாக நனைத்து எடுத்துக்கொண்டு அதிலே ஊற்றி அறுபது திரியாய்த் திரித்து நிழலுலர்த்திக் கொள்ளவும். திரி உறிஞ்சுமுன்னே புண்ணுள்ளவனானால் சும்மா குளிக்கவும். மண்டை வியாதி உள்ளவனானால் எண்ணெய் வார்த்து முழுகவும். மறுநாள் ஒரு திரிபுகை பிடிக்கவும். இப்படி ஒன்றை விட்டொருநாள் பிடிக்கவும். பிறகு எட்டுநாள் ஆன பிற்பாடு ஒன்பதாநாள் சும்மா குளிக்கவும். கார்ப்பு, புளிப்புத் தவிரவும்.

### சூதகக்கட்டு மூலிகை

ஆதளை, மாதளை அய்வண்ணெய், கொல்லங் கோவை, சிவன் வாழுமுகமாம். இதற்கு சுத்தி மத்தித்தால் டோலையிலே சாதமுடன் கட்டிவைத்தான். ஆதளைக்குப்

பேர்யெரியாலம்பால், அய்வனை என்பது மருதணை, சிவன் முகமென்பது அய்வலரியாகும். இவைகள் ரசங்கட்டுகிற மூலிகை என்றறியவேண்டியது.

### கிரந்திக்கு ஏகமூலி

நுணாக்காய் அதினிலை அதின்பட்டை, மருதனைப் பட்டை இனத்துக்குப் பாக்களவு வெந்நீரில் கொடுக்கவும். உப்பில்லாப் பத்தியம்.

### எலிகடிக்கு ஏக மூலி

ஆகாச கருடன் கிழங்கு வெள்ளாட்டுப்பாலில் மூன்றுநாள் உப்பில்லாப் பத்தியம் வைத்துக் கொடுக்கவும்.

### உன்மாதம், பைத்தியத்துக்கு நசியம்

உடும்பு, பிடிச்சுக்கொண்டு வந்து ஒரு கரண்டி நல்லெண்ணெயில் எரித்து நசியம்பண்ண உடனே தீரும். அநேக பைத்தியம் தீரும்.

### கணத்தெண்ணெய்

| | |
|---|---|
| சிவதாமணக்கு முத்து | 2¾படி |
| பழம்பாசிச்சாறு | ஆனைநெரிஞ்சிச்சாறு |
| பிளியாரைச்சாறு | வல்லாரைச்சாறு |
| சாணாக்கியச்சாறு | வெதுப்படக்கிச்சாறு |
| ஈரவெங்காயச்சாறு | எலுமிச்சம்பழச்சாறு |

இவை வகைக்கு ¾ படி

இளநீர் 6 படி

இதுவெல்லாம் காய்ச்சி வடித்து மென்பொடி, கிராம்பு, ஏலம், சாதிக்காய், சாதிப்பத்திரி, வகைக்கு 1 வராகன், சிறுநாகப்பூ, சன்னலவங்கப்பட்டை, செங்கதாரிப்பட்டை, அதிமதுரம், சடாமாஞ்சி இதுவும் வகைக்கு 1 வராகன்,

கல்மதம் 1வராகன், கோரோசினை ¼ பலம், பச்சைக்கற்பூரம் ¼ பலம், இதுவெல்லாம் பொடிபண்ணி எண்ணெயில் போட்டு, ரஸ்தாளிப் பழம் போட்டு ஒரு துண்டம் பழமும், ஒரு பொட்டுக்கரண்டி எண்ணெயும் அந்தி சந்தி சாப்பிடவும். சகல கணமும் தீரும்.

**மேக கிராணிக்கு**

அத்திப்பட்டை, மாம்பட்டை, அரசம்பட்டை, ஆலம்பட்டை, நாவல்பட்டை இது வகைக்கு 5 பலம், இதுவெல்லாம் பானையில் போட்டு இதில் மிதக்க தண்ணீர் வார்த்து எட்டில் ஒன்றாய்க் காய்ச்சி வடித்து மருட்டிக் குழம்பு போலே காய்ச்சி இதில் கூட்டு மருந்து புளியங் கொட்டைத்தோல் 3 பலம், சாதிக்காய் 5 பலம், அபின் 1 பலம்; லவங்கம் ¼ பலம், அதிமதுரம் ¼ பலம் இதுவெல்லாம் அந்தக் கஷாயம் வார்த்து அரைத்து அடைபோலே தட்டி அரசிலை சுத்தி நெருப்பில் 3 புடமிட்டு எடுத்துக் கழச்சிக்காய் அளவு தயிரில் கொடுக்கவும். சுரமுண்டானால் 3 நாள் கொடுக்கவும்.

**வில்வாதி**

வில்வவேர் 30 பலம், நறுக்கி இடித்து பலத்துக்கு இரண்டுபடி தண்ணீர்விட்டு ஏழுநாள் ஊறவிட்டு அடுப்பில் வைத்துக் காய்ச்சி எட்டிலொன்றாய் வற்றின பிறகு சீலை வடிகொண்டு பிழிந்துக்கொள்ளவும். வெல்லம் 30 பலம், இஞ்சி 4 பலம், துவைத்துப் பிழிந்து கஷாயத்தில் விட்டு லேகியம் பக்குவமாய்க் காய்ச்சி இதன் கற்கம் மிளகு 2 பலம், திப்பிலி 2 பலம், செவ்வியம் ¾பலம், தாளிசப்பத்திரி ¾பலம், சிறுநாகப்பூ ¼ பலம், திப்பிலிமூலம் 2 பலம், சித்திரமூலம் 1பலம் இவை இடித்துச் சூரணம் பண்ணி, லேகியத்தில் தூவி, கிண்டி லேகியபதமர்ந்து இறக்கி, குளிர ஆறினபிறகு, தேன்விட்டுக் கிளறி வைத்துக்கொள்ளவும்.

**தீரும் வியாதி:** சகல வாந்தியும், நெஞ்சிலுள்ள தோஷமும், காமாலை சத்தி குல்மம், இரத்த குல்மம், பைத்திய

குல்மம், கிராணி, அரோசிகம், பீனிசம், விக்கல், காசம், இருமல், பீலிகை, வாய்வு, பாண்டு, ரோகம் இது முதலானது எல்லாந்தீரும்.

**விரோசனம்**

முற்றின தேங்காய் இரண்டு கொண்டுவந்து, திருகி தன்பாலாய் எடுத்து, பாகம் இரண்டாக்கி ஒரு பாகத்தில் வெள்ளைப்பூண்டு 12 பலம், உரித்து அரைத்து அந்த பாலில் கலந்து வடிகொண்டு காலமே சாப்பிடவும். உடனே மறுபாகம் பாலை சற்றே அரைக்க ...★... நாழிகைக்குள்ளே சாப்பிட்டு விடவும். 20 நாழிகைக்கு மேல் தயிரும் சுடுசோறும் உப்பில்லாமல் சாப்பிடவும். இந்தப்படி 3 வேளைக்கு ஆறு தேங்காய் சாப்பிடவும். பிறகு நாலாநாள் மூன்று பொழுது நல்லெண்ணெய் தண்ணீர் ஈரவெங்காயம் இந்த மூன்றும் சேர்த்து மூன்றுபொழுது சாப்பிடவும்.

**தூதுவளை லேகியம்**

தூதுவளை 20 பலம் காயும் பூவுமாக கொண்டுவந்து தூதுவளையை நறுக்கி பானையில் நாலு மரக்கால் தண்ணீர் விட்டுக் காய்ச்சிக் குறுணியாக இறுத்து அந்தக் கஷாயத்தில் பூவும், காயும் போட்டு, நன்றாய் வெந்த பிறகு இறக்கி நன்றாய் மத்தியிட்டு நன்றாக வெண்ணெயான பிறகு சித்தரத்தை 1 பலம், சிறுதேக்கு 1 பலம், சீரகம் 1 பலம், கொத்தமல்லி 1 பலம், சுக்கு 1 பலம், கண்டங்கத்திரி 1 பலம், மிளகு 1 பலம், பழவெல்லம் 1 சேர், தேன் 5 சேர், மருந்தெல்லாம் சூரணம் பண்ணி வெல்லம் கரைத்து கடைந்த மருந்தில் தூள்போட்டுக் கிளறி வெல்லமும், தேனும் விட்டு இறக்கி தேகம் அறிந்து கொடுக்கவும். பிணி தீரும். உம்மாதபித்தம் சீந்திக்கீரை எடுத்து, ஏலம், அதிமதுரம், கொத்தமல்லி, சர்க்கரை கலந்து காலையில் வெருகடிப் பிரமாணம் சாப்பிடவும். எலுமிச்சம்பழச் சாற்றில் கொள்ளவும். ஆறுவகை உம்மாதம் சத்தி குணமாம் தீரும்.

★ சுவடியிலேயே விடுபட்டுள்ளது.

## அயிலாதி லேகியம்

முசுமுசுக்கைச்சாறு, வல்லாரைச்சாறு வகைக்கு 2 படி, சிறுகீரைச்சாறு 2 படி, பொன்னாங்காணிச்சாறு 2 படி, நெல்லிக்காய்ச்சாறு 2 படி, இந்த சாறுகள் கூட்டிச் சர்க்கரை 20 பலம், சீரகம் 1 பலம், ஏலம் 1 பலம்,அதிமதுரம், கோஷ்டம் வகைக்கு 1பலம், மிளகு ¾பலம், திப்பிலி 5 பலம், தாளிசப்பத்திரி 5 பலம், சிறுநாகப்பூ 5, கூகனீறு 5 பலம், கிராம்பு ¼ பலம், இவைகளை பொடிபண்ணி லேகியத்தில் தூவி ஆறினபிறகு நாட்டுப் பசுவின் நெய் விட்டுக் கிளறி எடுத்து வைத்து முக்கழஞ்சி திண்ணவும். நாற்பது வகை பித்தமும், வாய்வு, அரோசிகம், அக்கினிமாந்தம், இருமல், கைகால் எரிவு, பிரமிய சூலை எரிவு இதுகள் தீரும்.

## மாந்தத்துக்கு எண்ணெய்

விளக்கெண்ணெய் 1¾ படி, பாகல்கொடி, குதிரை வாலி, சிறுபிள்ளடி, தகரை, பழம்பாசி, கூத்தங்குறம்பை, ஓரிதழ்த்தாமரை, குறிவிச்சம் பூண்டு, முசுமுசுக்கை, பொன்னாங்காணி, சீந்திித்தண்டு, கோவைத்தண்டு, முடக்கொத்தான், கத்தாழை, வெங்காயம் இவைகள் சாறு உழக்கு, சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு, குங்குமப்பூ, ஏலம், கடுக்காய், கடுகுரோகணி, பஞ்ச திரவியம் இவை வகைக்கு ¼ பலம் போட்டு பதத்தில் வடித்து, பக்குவமறிந்து கொடுக்கவும். தாயார் பத்தியமாக இருக்கவும்.

## சுழி கணத்துக்கு

விளக்கெண்ணெய் ஒரு தேக்கரண்டி, முலைப்பால், கோவை, முசுமுசுக்கை, வல்லாரை, நரிபயித்தங்கொடி, இவைகள் வகைக்குச்சாறு நாழி, குறிவிச்சம் பூண்டு, கத்தாழை வகைக்குச் சாறு உரி, தூதுவிளம்பழம் 20, சீரகம், கருஞ்சீரகம் இவை வகைக்கு 1 வராகன், கோரோசனை, கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி இவைகள் வகைக்கு ¼ வராகன், அரைத்துப்போட்டு, வடித்து பக்குவமறிந்து, கொடுக்கவும்.

காய்ச்சல், மாந்தகணம், வறக்கணம், வாய்வெந்தது தீரும். தாய் பத்தியத்துடனே இருக்கவும்.

### சுழி கணத்துக்கு

விளக்கெண்ணெய் உரி, பசுவின் பால் உரி, எலுமிச்சம் பழச்சாறு உரி, 2 வராகன், பதத்தில் வடித்து பேதிக்குக் கொடுத்துப் பிறகு எண்ணெய் கொடுக்கவும்.

### மாந்த கணமாத்திரை

சாதிக்காய், சாதிப்பத்திரி,கிராம்பு, அசமதாகம், சீரகம், ஏலம் இது சமனாக கொண்டுவந்து மாதளம் பிஞ்சுக் குடைஞ்சு அதிலடைத்து சாணியில் பொதிந்து எடுத்துப் புடமிட்டு, சாணி போக்கி எடுத்து எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து, மிளகுப் பிரமாணம் உருண்டை பண்ணிக் கடுங்கஷாயத்தில் ஒரு உருண்டை இடவும்.

### குழந்தைகளுக்கு வயிறு பேதிக்கு

விளக்கெண்ணெயில் குறிவிச்சம்வேர், உள்ளி, வசம்பு, நறுக்கிப்போட்டு சூரியபுடமாய் வைத்துக்கொண்டு, பேதிக்குக் கொடுத்தால் கணம், மாந்தகணம், பிள்ளை வியாதிக்கெல்லாம் கொடுக்கலாம்.

### உள்க்காய்ச்சல், ஊது வெட்டைக்கு எண்ணெய்

விளக்கெண்ணெய் 2 , முசுமுசுக்கை, கோவை, வல்லாரை, நரிபயித்தங்கொடி, இவைகள் வகைக்குச் சாறு நாழி, குறிவிச்சம்பூண்டு, ஈரவெங்காயம் இது வகைக்கு உரி, கத்தாழை, சீரகம் ¾பலம், கருஞ்சீரகம் ¼பலம், கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி, இது வகைக்கு 1¾ வராகன், அரைத்து வடித்து எட்டு நாளைக்கொருக்கால் வயிறு பேதிக்குக் கொடுக்கவும். வெட்டை தணிந்து சரீரமும் ஊறிப் பெருக்கும். கணம், விலாஎரிவு, நாக்கு எரிவு, மூக்கில் தண்ணீர் விழுகிறது இதுகள் நிற்கும்.

### உள்க்காய்ச்சலுக்கு

இளநீர்மட்டை, தாழம் விழுது, பூலாம்பட்டை, செங்கழுநீர்க்கிழங்கு, தாமரை வளையம் இவைகள் சாறு சமன்கூட்டிச் சர்க்கரை கூட்டிக்கொள்ளவும். உஷ்ணம், உள்காய்ச்சல் தீரும்.

### சகல பீனிசத்துக்கு

நல்லெண்ணெய் 2 பலம், செப்பு நெரிஞ்சிச்சாறு 2பலம், மிளகு 2 பலம், வெள்ளைப்பூண்டு 2 பலம், வசம்பு 1¾பலம், இது அரைத்து எண்ணெயில் போட்டு வடித்து முறுகின பதத்தில் வடித்து முழுகவும். அன்றைக்கு கைப்பு, புளிப்புத் தவிரவும். வேப்பெண்ணெய் 2, ஆனை குப்பைமேனிச் சாறு 2 பலம், மிளகு 2 பலம், வெள்ளைப் பூண்டு 3 பலம், அரைத்துப்போட்டு மெழுகுபதத்தில் வடித்து முழுகவும். இதுக்குப் புளி ஆகாது.

நெல்லிக்காய், களாக்காய், முத்தினக்காயாய் கொண்டு வந்து நிழலுனர்த்தலாய் உலர்த்தி ஆறின பதத்தில் நறுக்கிக் கொட்டை எடுத்து எட்டு நாளைக்கொருக்கால் ஒரு கரண்டி உச்சியிலே தேய்த்து நெல்லிமுள்ளி அதன் பேரில் தேய்த்து வென்னீரால் முழுகவும். இந்தப்படிக்கி இருபது முழுக்கு முழுகவும்.

### இதுலாடா பிரயோகம்

நல்லெண்ணெய் 2 பலம், பால் 2 பலம், கையாந்தகரைச்சாறு 2 பலம், கடுக்காய் 8 பலம், தான்றிக்காய் 8 பலம், நெல்லிமுள்ளி 8 பலம், இது கஷாயம், அதிமதுரம் 3பலம், இலவம்பட்டை 3 பலம், இதுபோட்டு மெழுகு பதத்தில் இறக்கி வடித்து முழுகவும். முழுகின அன்றைக்கு கைப்பு, புளிப்புத் தவிர்க்கவும்.

**தீரும் வியாதி:** இரைப்பு, இருமல், சுரமுந் தீரும்.

## இரைப்பு, இருமலுக்கு

குறட்டைப்பழம் சீலையில் மூன்று தரம் ஊட்டிக் காயவைத்து அந்தத் திரிபுகை சூக்கிராணம் பண்ணத்தீரும். அழிஞ்சில், அடம்பூ, தழுதாளை, ஆடாதொடை, சிவனார் வேம்பு, குக்குடப்புடம் வைத்துத் தயிலம் இறக்கிக் கொடுக்கவும். சன்னி, வயிற்றுவலி, பாண்டு, வாய்வு, பிடிப்புத் தீரும்.

## சன்னி வயிற்று வலிக்கு

துளசி..., சிறுகீரை, வெண்ணொச்சி, வில்வம், நெல்லி, நுணா, அழிஞ்சில், தூதுவேளை, மிளகரணை, இவை வதக்கி, வேர் 15 பலம், எலுமிச்சம்வேர் 30 பலம், வெட்டிவேர் , இலாமிச்சம்வேர் 10 பலம், பரங்கிப்பட்டை, சந்தனக்கட்டை 16 பலம், தான்றிக்காய் 8 பலம், வாய்விளங்கம், கோஷ்டம், சித்தரத்தை 15 பலம், சாம்பிராணி 5 பலம், பச்சைக்கற்பூரம், அரிதாரம் 5 பலம், இனி வேர்வகை சிறுக நறுக்கிக் கொள்ளவும். பட்டைக்கடுக்காய், தான்றிக்காய், கையாந் தகரைச் சாற்றில் ஊற வைத்துக்கொள்ளவும். உசத்தி சரக்குகள் ஈச்சங்கன்று சாத்தில் அரைத்து அடைதட்டிக் கொள்ளுவது. புடம் வைக்கிற கலயத்து, கையாந்தகரைச்சாறு, தடவி இதுகளை அடைத்து பூப்புடத்தைலம் இறக்கி உள்ளுக்குக் கொள்ளவும். சகல சுரம், சகல சன்னி, சகல வாயுவுக்கும், உள்ளுக்கும் கொடுத்து பணவிடை கலிக்கம் போடவும். மண்டைரோகத்துக்கு துணியில் தடவி திரி பண்ணி கொழுத்தி பூசை ஆக்கிறாணம் புகைக்கவும். கசப்பு, புளிப்புத் தவிர்க்கவும், பால், நெய் கூட்டவும்.

## வாய்வுக்கு

கருஞ்சீரகம் 5 பலம், கல்லுப்பு 2 வராகன், பெருங்காயம் 1 வராகன், சுக்கு 1 வராகன், மிளகு, ஓமம், சீரகம், கிராம்பு, சாதிப்பத்திரி, வகைக்கு 5 பலம், இந்த 9 வகையும் அரைத்துப் பொடிபண்ணி சட்டியிலே துணிகட்டி, அரிச்சுக்கொண்டு

பிறகு நாட்டுச் சர்க்கரை அரைப்பலம் கூட கூட்டி மூன்றுவிரல் கொண்டதூள் தேனில் கொள்ளவும். இரண்டுநேரமும் சாப்பிட்டால் சரீரத்திலே இருக்கிற வாய்வு, பக்கச்சூலைகளும் வயிறு உப்புசம் குணமாகும்.

***பத்தியம்:*** வாத பதார்த்தம் ஆகாது.

**மகாவில்வாதி லேகியம்**

வில்வவேர் 50 பலம், விளாவேர் 15 பலம், கருவேப்பிலைவேர் 6 பலம், சித்தமுட்டிவேர் 12 பலம், பேராமுட்டிவேர் 12 பலம், தூதுவேளைவேர் 12 பலம், கண்டங்கத்திரிவேர் 6 பலம், நெல்லிப்பருப்பு 6 பலம், சங்கம்வேர் 4 பலம், தேத்தாவேர் 15 பலம், சீந்தித்தண்டு 12 பலம், பொன்முசுட்டைவேர் 12 பலம், வெள்ளைச்சாரணை வேர் 12 பலம், நன்னாரிவேர் பலம் 8, விஷ்ணுக் கிராந்தி 8 பலம், மூக்கிரவேளைவேர் 10 பலம், அருக்கம்வேர் 15 பலம், இதுவெல்லாம் ஒரு பெரிய பானையிலே போட்டு, நாலுமரக்கால் தண்ணீர்விட்டு, எட்டில் ஒன்றாய்க் காய்ச்சி இறுத்துக்கொண்டு, இதில் கடைமருந்து சர்க்கரை 25 பலம், இஞ்சிச்சாறு 1 படி, கொம்மட்டி மாதளம்பழச்சாறு 5 படி, முந்திரிச்சம்பழம் 4 பலம், பேரீச்சம்பழம் 4 பலம், அரத்தை 5பலம், தாளீசப்பத்திரி 5 பலம், திப்பிலி 1 பலம், கோஷ்டம் 5பலம், அதிமதுரம் ¼பலம், கல்மதம் ¼ பலம், திப்பிலி மூலம் 5 பலம், சிறுதேக்கு 5 பலம், மிளகு 5 பலம், சுக்கு 2 பலம், விளாமிச்சம்வேர்5பலம், இந்துப்பு ¼ பலம், பருத்தி 5 பலம், சம்பா நெல் பொரியும் 5 பலம், கிராம்பு 5 பலம், செவ்வியம் 5பலம், செருநாகப்பூ 5¼ பலம், சித்திரமூலம் 5 பலம், ஏலம் 5 பலம், பழவெல்லம் 12 பலம், இலவங்கம் ¾ பலம், லவங்கப்பத்திரி ¾பலம், சீரகம் 4 பலம், பரங்கிப்பட்டை 4பலம், சாதிக்காய் ¼பலம், சடாமாஞ்சில் ¾பலம், கல்நார் பலம், ஓமம் ¾பலம், இதுவெல்லாம் சூரணம்பண்ணி லேகியத்தில் போட்டுக் கிண்டி, தேன் ¼படி, பசுவின் நெய் ...., லேகியமாய்இறக்கி வைத்துக்கொண்டு, சரீரம் அறிந்து சீனிச்சர்க்கரைக் கூட்டிக்கொண்டு சாப்பிடவும்.

**தீரும் வியாதி:** வலிகுன்மம், குணமாம். பித்தக் கழிச்சல், இளைப்பு, அக்கினிமந்தம், வாயுமேகம், வெட்டை இதுவெல்லாம் தீரும். கைப்பு, புளிப்புத் தவிரவும்.

### கணத்தெண்ணெய்

ஆமணக்கெண்ணெய் 1 படி, எலுமிச்சம்பழம் பழச்சாறு 1 படி, கத்தாழைச்சாறு 1 படி, ஈரவெங்காயம் சாறு 1 படி, வெந்தயம் 2 பலம், கோஷ்டம் 2 பலம், ஏலம் ¼பலம், இலவங்கப்பட்டை ¼பலம், செண்பகமொட்டு ¼ பலம், வல்லாரைச்சாறு 1 படி, வில்வ இலைச்சாறு 1படி, தென்னங்குறும்பை இதுவெல்லாம் போட்டு எண்ணெய் வடித்து வைத்துக்கொண்டு தினம் இரண்டுவேளை சாப்பிடவும். வியாதி எல்லாந் தீரும். இதுக்கு இச்சாப் பத்தியம்.

### மேகசூலைக்கு மருந்து

மிளகறணை வேர்ப்பட்டை, பூவரசம்பட்டை, சங்கம்வேர்ப்பட்டை, பெருமருந்து, பொன்முசுட்டை, அகில்பட்டை, வேப்பம்பட்டை, நுணாப்பட்டை, இலுப்பைப்பட்டை, வெள்ளறுகு, ஊமத்தைவேர், சிவனார்வேம்பு ஆக வகைக்கு ¾பலம் இதுவெல்லாம் காயப்போட்டு, இடித்துத் தூள் போட்டு ½படி தண்ணீர் விட்டு, எட்டில் ஒன்றாய்க் காய்ச்சி அந்தி சந்தி குடிக்கவும். ஏழுநாள் குடித்து மறுபத்தியம் ஏழுநாள், உப்பு, புளி ஆகாது. வியாதி தீரும்.

### இருமலுக்கு

ஆடாதொடையிலைச்சாறு உரி, பசுவின் நெய் உரி, அதிமதுரம் ¾பலம், திப்பிலி மூலம் 2 பலம், உள்ளிப் பருப்பு ¼பலம், சீந்தில்தண்டு ¾பலம், மிளகு ¾ பலம், இது வெல்லாம் அரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்துக்கொண்டு அலகு தேன் விட்டு சரீரம் அறிந்து கொடுக்கவும். இருமல் போகும்.

### ஒருதலைவலிக்கு

சமுத்திராப்பழத்தை எலுமிச்சம்பழச்சாறு விட்டு அரைத்து வலித்த பிறத்தில் நாசியில் விட நிற்கும்.

### தலைநோவுக்கு

வெற்றிலையும், சுண்ணாம்பும் குடத்து மண்ணும் அரைத்துப் பூசத் தீரும்.

### பித்தத்துக்கு மருந்து

சாப்பிட்டு படுக்கிறபோது ஒரு மிளகு வாயில் அடக்கி மெல்லாமல் வைத்து இருந்து விடியற்காலை கிடந்த கிடையிலே மென்று வென்னீரும், வயிறு நிறையக் குடித்து, அந்தச் சினமே கைபோட்டு எடுக்க, வாயினாலே எடுக்கும். பித்தம் போகும். அகத்தியிலை, தொட்டாச்சுருங்கி, மருங்காலையிலை இதுமூன்றும் கசக்கிச் சாறு பிழிந்து கொண்டு தலையில் தேய்க்கவும். இது கைகண்டது.

### சோகைக்குத் தலையில் தேய்க்கவும்

கரிசலாங்கண்ணி, கீழாநெல்லியிலை, திரிபுரம் எரித்தான் இலை, நாய்வேளையிலை, நல்லவேளையிலை இந்த அஞ்சு வகையும் நன்றாய் துவைத்து சாறு பிழிந்து வீசும்படி தலையில் சுவற ஒரு நாள் தேய்த்து கண்டங்களுக்கு கீழ்தான் பானங்கள் பண்ணி, ஒருநாள் தலையில் வைத்து, 9-ஆம் நாள் தலை முழுகவும்.

***பத்தியம்:*** *14* நாளைக்கு உப்பு முதல் ஒன்றும் ஆகாது. சோகை தீரும்.

### பாண்டு ரோகம்

நீடிய தாளைப்பழங்கொண்டு வந்து இடித்துப் பிடித்து பிழிந்துக்கொண்டு, காய்ச்சிச்சாறு குறுகின உடனே இதுக்கு

மருந்து இந்துப்பு, ஓமம், பெருமரப்பட்டை, இதுமூன்றும் இடித்துச்சீலை வடி கொண்டு அதில் மென்பொடி தூவி கடுகு திரண்டு வாராது இறக்கி, விளக்கெண்ணெய் வார்த்துக் கிண்டிக்கொள்ளவும்.

***தீரும் வியாதி:*** மேல்க்கவுசை உதிரதோஷம், பாண்டு ரோகம் இது முதலானது எல்லாம் தீரும்.

***பத்தியம்:*** மோரும், சோறும், மிளகுநீர், பச்சைத் தண்ணீர் இது கூட்டவும். மிஞ்சினால்த் தண்ணீரில் குளித்து மோரும் சோறும் உண்ணவும்.

### மூச்சுக்குத்தினால்

வேளையிலைச் சாறு பிழிந்து இடதுபுறமானால் வலதுபுறம், வலது புறமானால் இடதுபுறம் பிழியவும்.

### தாளிசப்பத்திரிச் சூரணம்

தாளிசப்பத்திரி 1 வராகன், மிளகு 2 வராகன், சுக்கு 3 வராகன், திப்பிலி 4 வராகன், கிராம்பு 5 வராகன், திப்பிலி மூலம் 6 வராகன், சிவதைவேர் 6 வராகன், சர்க்கரை 8 பலம், இவை சூரணம் பண்ணித் திண்ணவும்.

***தீரும் வியாதி:*** சுரம், வாய்வு மந்தம், அரோசிகம், ஜலதோஷம், பக்கக்குன்மம், பைத்திய வாய்வு, உள்சுரம் இதுகளெல்லாம் தீரும்.

### சுரத்தின்மேல் அதிசாரத்துக்கு அருளாதி கியாழம்

பெருமரப்பட்டை, நன்னாவேரிவேர், இலாம்பிச்சம் வேர், மாதளை ஓடு, பொன்முசுட்டைவேர், சீந்தில்தண்டு, அதிவிடையம், என்று சொல்லி கஷாயம் வைத்துக் கொடுக்கவும். வியாதி தீரும்.

## உள்காய்ச்சலுக்கு உஷ்ண வெட்டைக்கு

வெள் வெங்காயம் 1 பலம், உரிச்சரைத்து வழித்து கல்லுக்காயப் போட்டுத் தயிலம் பிழிந்து, முருங்கைப் பட்டைச்சாறும், வேலிப்பருத்திச்சாறும் மூன்றும் சமன் கூட்டிக் காய்ச்சி, சித்தரத்தை 1 பலம், இடித்து வடிகட்டினதூள் போட்டுக் கிண்டிக் கழற்சிக்காயளவு தேனில் குழப்பித் தினம் இப்படி ஆறுதரம் சாப்பிடவும், தீரும்.

***தீரும் வியாதி:*** நெஞ்சுவலி, அரோசிகம், வாந்தி, இளைப்பு, சன்ன தோஷம் எல்லாந் தீரும்.

## வாதமூலம்

காட்டுக் கருணைக்கிழங்கு, புட்டெருவில் சுட்டு வெந்த பிறகு மேல் தோலுரிச்சுப் போட்டு காலமே ஒரு நேரம் 7 நாள் சாப்பிடவும். பத்தியம் ஒன்று மாகாது. ரத்தமூலம், உள்மூலம், பிறமூலந் தீரும்.

## நடுக்கல் சுரத்துக்கு

எருக்கம்முட்டைப்பூக்கொண்டு, ஐந்து அவுரிச்சாறு விட்டு இடித்துப் பிழிந்து வடிசெய்துகொண்டு பெரிய மனுசாளுக்கு அரைக்கால்படியும், குழந்தைகளுக்கு வீசம் படியும் கொடுக்கவும். சுரம் கண்ட பத்தாம்நாள் அறிந்து கொடுக்கவும்.

***பத்தியம்:*** புளி இல்லாத மிளகுச் சாறும், அன்னமும் கொடுக்கவும். இப்படி மூன்றுபொழுது கொடுக்கவும். பிணி தீரும். இது நடுக்கல் வருமுன்னுக்கு கொடுக்கவும்.

## குழிவாழைப்புண்ணுக்கு

குழிவாழைப்புண்ணுக்கு ஆதாலை பால் 4 வராகன், புஸ்கம்பால் 4 வராகன், ஆவாரம்பட்டை 2 வராகன், வேப்ப எண்ணெய் 1 வராகன், வசம்பு 3 வராகன், கொடிவேலிவேர்

1வராகன், துருசு 1 வராகன், தரிப்புள்ளு 1 வராகன், காசுக்கட்டி ¾ வராகன், முதின் பூவரசன்பட்டைச்சாறு 4 வராகன், சரக்கெண்ணெய், வேர்ப்பட்டைச்சாறு 4 வராகன், மருதம்பட்டைச்சாறு 4 வராகன், முள்ளு 1 வராகன், கடுக்காய் ¼ வராகன், நல்லெண்ணெய் ¼படி, இந்த சரக்கு எல்லாம் போட்டுக் காய்ச்சி மெழுகுப் பதத்தில் எண்ணெய் இறுத்துக்கொள்ளவும். மூன்றுநாள் பணியில் வைத்து நாலாம்நாள் எடுத்து புண்ணில் போட புண் ஆறிப்போகும்.

### உண்ணாக்கு வளர்ந்து இருந்தால்

பொரிக்காரத்தை பொரித்துக் கூறிய சுண்ணாம்பு கூடப் போட்டு உண்ணாக்கில் வைக்கவும். மூன்று நாள் வைக்கவும்.

### பிள்ளை பெறமாட்டாத பெண்களுக்கு

அதிமதுரம் கழஞ்சு அரைத்துக்கொடுக்கவும். பிள்ளை பெறுவாள்.

### கருங்கிரந்திக்கு

சிறுகீரைவேரை அரைத்து நல்லெண்ணெயில் குழப்பி மூன்றுநாள் ஆறுபொழுது கொடுக்கவும். எந்த புண்ணும் ஆறிப்போகும்.

***பத்தியம்:*** உப்பு, புளிப்பு, கசப்பு, புகையிலைத் தவிரவும்.

### ஆறாத புண்ணுக்கு எண்ணெய்

ஆவாரைவேர்ப்பட்டை, துடரிவேர்ப்பட்டை, வேம்பாடம் பட்டை, வெள்வெங்காயம், துத்தம், துருசு, ஒரு...விளக்கெண்ணெயில் வேகவைத்துப் புண்ணில் போடவும்.

### பல்லு கிட்டினதுக்கு

பல்லுகிட்டி நாவு திறவாத சன்னிக்கு மாவிலிங்கை சாறுகொண்டு வந்து திப்பிலியை அந்த சாத்திலுரைத்து நாசியில் பிழியவும். மாறும்.

### சொரிசிரங்குக்கு

சிறாசெங்கழுநீர்வேர் 4 வராகன், கரிப்பான் வேர் 4வராகன், கஸ்தூரி மஞ்சள் 4 வராகன், மிளகு 4 வராகன், நல்லெண்ணெயில் வேகவைத்து 9 நாளைக்கு 3 முழுக்கு முழுகவும்.

### பதினெட்டுவகை எலி கடிக்கும்

குப்பைமேனியை அரைத்து ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்து எருக்கம்பாலில் குழைத்து வைத்துக்கொண்டு, சர்க்கரையும் போட்டு, பானகம் கரைத்து நிறைய குடிக்கக் கொடுத்து அரைநாழிகை சென்ற பிறகு, இந்த மருந்தை முழுங்கவும். இந்த மருந்து நின்று ஒரு நாழிகை சென்ற பிறகு முப்பது குடம் தண்ணீர் எடுத்து தலையில் விடவும். இந்தபடிக்கு மூன்றுநாள் செய்யவும்.

பாகயிலைச்சாறு, வெள்ளசாரணைச்சாறு, வெற்றிலைச் சாறு, தும்பையிலைச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, குண்டுமணி யிலைச்சாறு, குப்பைமேனிச்சாறு, மிளகு இந்த சாறுவிட்டு, அரைத்து உருண்டைபண்ணி வைத்துக்கொண்டு உரைத்துக் கண்ணில் போடவும்.

### கழிச்சலுக்கு மருந்து

கடுக்காய் பருப்புச்சுட்டு பொடிசெய்து அவின் கூட்டி எலுமிச்சம்பழச்சாறு விட்டு அரைத்து, தேத்தாங்கொட்டைப் பிரமாணம் கொள்ளவும். கழிச்சல் மாறும்.

## மேல்மூலம்

ரசகற்பூரம் ¾ வராகன், வெளிச்சம்பிசின் 5 வராகன், கருங்குங்கிலியம் 2 வராகன், கத்தகாம்பு ¾வராகன், காசுகட்டி 5வராகன், துத்தம் 1 வராகன், துருசு 1 வராகன் இதை அம்மியில் வைத்து நேக அரைத்துச் சிமிளியில் வைத்துக்கொண்டு வேப்பிலை ஒரு குத்து, புளியிலை ஒருகுத்து, பொடுதலை ஒருகுத்து இந்த மூன்று பச்சிலையும் அடை குளிளீராய் போட்டுக் கொண்டு இந்த செலத்தைவிட்டுக் கழுவிப் போட்டு இந்த முலாம் போடவும். எந்த புண்ணும் ஆறிப்போகும். 7நாள் எண்ணெய் சாப்பிட்டு 9-ஆம் நாள் தலைக்குத் தண்ணீர் விடவும்.

## உள்மூலத்துக்கு

கழுதும்பை ஒருகுத்து இலை கொண்டு வந்து அம்மியில் நேக அரைத்து நெய்யில் அடைதட்டி, 7நாள் சாப்பிடவும். ஆசன கடுப்புக்கு எருமை மாட்டுக்கொம்பு செதுக்கி ஒருகுத்து சிராய் போட்டு, பச்சை நெல்லு உமியைப் போட்டு, புகை பிடிக்கிறது. உள்ளுக்கு பசுவின்பால் சேர்க்கவும். வெள்ளவெங்காயம் 1 பலம் உரித்துப் பாலிலே போட்டு, வேகவிட்டு, நல் ஆப்பையாலே மத்திச்சு மூணுவேளை சாப்பிடவும். வாரக்கண்டி இலை இரண்டு குத்து, எலிச்செவிக்கீரை இரண்டு குத்து, இந்த இரண்டு கீரையும் சிறுக உப்பு போட்டு அவிச்சு முனம்பின பிடியாய் முதற்சோற்றிலே சாப்பிடவும். காற அரிசி வேலைக்கி ஒருபிடி அரிசி ஊறப்போட்டு அரைத்து வைத்துக்கொண்டு, மற்ற கிழங்கு கொண்டு வந்து அரைத்து ஒருகொட்டைப்பாக்குப் பிரமாணம் எடுத்து, அந்த மாவிலே சேர்த்து அடைதட்டி குடியில் நல்லெண்ணெயில் தோய்த்துச் சாப்பிடவும். இந்தப்படிக்கி ஏழுநாள் சாப்பிடவும்.

## கணை 18-க்கும் எண்ணெய்

சிற்றாமணக்கு முத்து 2 படி, பசுவின்பால் 2 படி மேற்படி முத்தை, மேற்படி பாலில் அரைத்து அவித்து தண்ணீரில்லாமல் கிண்டி இறக்கி, இடித்து மாவை நாலுபடி இளநீரில் கலக்கி, சிவந்து எண்ணெயை வடித்து வைத்துக்கொண்டு, சாதிக்காய், சாதிப்பத்திரி, சீரகம், மாசிக்காய், அதிமதுரம், வசம்பு, ஓமம், திப்பிலி, குரோசாணி, வெந்தயம் மேல்படி வகைக்குக் கால் கழஞ்சி, மேல்படி கூட்டி வல்லாரை, பொன்னாங்காணி, துளசி, பிரமி மேல்படி வகைக்கு அரைக்காலாகப் பிழிந்து கடைமருந்தை அரைத்து, மேல்படி சாத்தில் கலக்கி, மேல்படி எண்ணெயில் கலந்து மெழுகுபதத்தில் வடித்துக்கொண்டு குழந்தைகளுக்கு ஒரு கரண்டியாகக் கொடுக்கவும்.

***தீரும் வியாதி:*** *கணை-18*, வயிற்றுவலி, கண்மயக்கம், வலிப்பு, பக்கவாதம், கை, கால் குடைச்சல் முதலியன.

## வேறு

கீழ்க்காநெல்லி 1 பிடி, கருவேலம்பட்டை 1பிடி, வெங்காயம் ஒருபிடி, குப்பைமேனிச்சாறு 4 படி, இதில் 1 படி விளக்கெண்ணெய் விட்டுக் காய்ச்சி ஒரு கரண்டியாகக் கொடுக்கவும்.

## குழந்தைக்கு பேதி நிற்க மருந்து

புளியாரையும், வாழைப்பூவையும் ஒன்றாய் சேர்த்து புட்டவியலாக அவித்து, பிழிந்து, தேன் குத்திக்கொடுக்கவும். பேதி நிற்கும்.

## பிள்ளைகட்கும், குழந்தைகட்கும், மாதளை நெய்

மாதளைச்சமூலமும், அமிர்த்த சக்கரையும் சேர்த்து, இடித்துக் குழம்பதாக்கி ஆவின் வெண்ணெய் கூட சேர்த்து, சாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலரிசி, பொடித்துப் போட்டுக்

கிண்டிக் காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கிக்கொண்டு பூசைசெய்து வைத்துக்கொண்டு பிள்ளைகட்குக் கரண்டி வீதம் கொடுக்கவும்.

**தீரும் வியாதி:** *18-தோஷம் போகும். வயிற்றிரைச்சல், கழிச்சல் தீரும்.*

**பிள்ளைகளுக்கு எண்ணெய்**

| | |
|---|---|
| மிளகு | சுக்கு |
| திப்பிலி | ஓமம் |
| வசம்பு | காயம் |
| பூண்டு | மஞ்சள் |
| அரத்தை | |

வகைக்கு 1 படி

சேர்த்துத் தட்டித் தூள்செய்து வைத்துக்கொண்டு வேப்பெண்ணெய் ¼படி, பொடியைப் போட்டுக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு பிள்ளைகளுக்கு அரையாகவும், சிறுபிள்ளைகளுக்கு குறைத்தும் கொடுக்கவும்.

**பத்தியம்:** புளி ஆகாது.

| | |
|---|---|
| வசம் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| மஞ்சள் | வேப்பம்பட்டை |
| முருங்கைப்பட்டைவேர் | ஆகவேர் |
| கொழுஞ்சிவேர் | வெள்ளாட்டுத்தோல் |

ஓர் நிரையாக தூள்செய்து வேலிப்பருத்திச்சாற்றை சீலையிலூட்டி காயவைத்து முன்மருந்தை இடித்துத் தூள்பண்ணி திருத்துமுட்டி கருத்தில் கோர்த்து விளக்கெண்ணெய் விட்டு, சுடர் மூன்று வடித்து வைத்துக் கொண்டு அரைத்துத் துட்டு எடை கொடுக்கவும். அத்தி வடக்கே போகிற வேரில் வெட்டி அதின்கீழ் புதுக்கலசம்

வைத்தால் ஜலம் இறங்கும். அதை எடுத்து வைத்துக் கொண்டு, சீனியை கூடப்போட்டு வைத்துக்கொண்டு தினசரி சாப்பிட்டு வரவும்.

### வயிற்றுக்குள் இறந்த பிள்ளை விழ மருந்து

நாங்குலுவை அரைத்து, நல்ல எண்ணெயில் கலக்கிச் சாப்பிடவும். விழும்.

### மேல்படி மருந்து

கடுகை அரைத்து நல்ல சாராயத்தில் கலக்கிச் சாப்பிடவும். இரண்டுபோதும். வெறுஞ் சாராயங் கொடுக்க விழும்.

### கரப்பானுக்கு

| | |
|---|---|
| நல்லெண்ணெய் ¼படி | வெற்றிலைச்சாறு ¾படி |
| கேசரிவேதிச்சாறு | பொன்னாங்காணிச்சாறு |
| நொச்சிச்சாறு | கரப்பான் சாறு |

வகைக்கு ¾ படி

மேற்படி எண்ணெயில் விட்டு புகையிலைக்கட்டு காம்பு 1 புடி, எருக்கம் பழுப்பு ஒன்றாய், நன்றாய் இடித்து மேல்படி எண்ணெயில் கலக்கி தேன் ஓலை தீப்போட்டு காய்ச்சிப் பதம் வருகிறபோது, கருஞ்சீரகம், கார்கோலரிசி வகைக்கு விரவி பொடித்துப் போட்டுப் பதத்தில் இறக்கி மறுநாள் ரவியில் (சூரியன்) வைத்தபின், உள்பாதங்கம் வைத்து குழந்தைகளுக்குப் புண்ணில் போடத்தீரும்.

### கரப்பானுக்கு

செம்பன நெருஞ்சி ¼படி, துளசி ¼படி, அகத்தியிலை ¼படி, உள்ளிச்சார் ¾படி, நல்லெண்ணெய் ¼படி, ஆக ஒன்றாய்க் கலக்கி மெழுகு பதத்தில் காய்ச்சி குழந்தை குட்டி, பெரியமனுசனுக்கு 10படி ஆக அஞ்சுபோத சாப்பிடவும்.

***பத்தியம்:*** உப்பு ஆகாது.

மேற்படி எண்ணெய் வடிக்கிறபோது கலசத்தில் கருஞ்சீரகம், கார்காலரிசி, துத்தம், துருசு ஆக வகை நாலும் துட்டு கடுவாங்கி பொடித்துப்போட்டு எண்ணெயை வடித்து, உள்ளுக்குக் கொடுக்கவும்.

## காசநீருக்கு

கச்சாணத்தகரைச்சாறு ¼படி, நெல்லிக்காய்ச்சாறு ¼படி, கற்றாழை சோற்றை ஏழு தண்ணீர் விட்டு கலக்கி,கடுக்காய்த் தூள் போட்டு, களிக்கட்டி, தண்ணீர் ¼படி, சாதிக்காய் ½, முலைப்பால் விட்டு, அரைத்து நல்லெண்ணெய் ¼படி ஆக ஒன்றாய் ரோகித்து காய்ச்சி முழுகவும்.

***பத்தியம்:*** புளி ஆகாது.

சவரியிலைச்சாறு 1 நாழி, பழச்சாறு 1 நாழி, பொடுதலைச்சாறு 1 நாழி, கையான்தகரைச்சாறு 1 நாழி, பசுவின்பால் 1 நாழி, மிளகு 1 பலம், பசுவின்பால் விட்டரைத்து நல்லெண்ணெய் வடித்து,முழுகிவரவும். மிளகுச்சாரும், சாதமும் சாப்பிட்டு வரவும்.

***பத்தியம்:*** போகம் நீக்கவும்.

***தீரும் வியாதி:*** கபாலவலி, கபாலகுத்து, பீனிசம், மண்டைச்சூலை, நேத்திரத்தில் வியாதி, மாசிநீர்க்கடுப்பு, மேகச்சூடு, இவ்வளவும் தீரும். பன்றி முள்ளை, புங்கெண்ணெய் கொண்டு நன்றாய் அரைத்துக் காதில்விட்டு பஞ்சு வைத்தடைக்கத் தீரும்.

## ஒருதலை மண்டை இடிக்கி எண்ணெய்

சித்தகத்திச்சாறு ¼படி, நல்லெண்ணெய் ¼படி கூட விட்டுக் கிண்டி, ரவியில் (சூரியன்) வைத்துக்காய்ச்சி,

பருவத்தில் இறக்கிக் கலசத்தில் நல்ல சாம்பிராணி பொடித்துப் போட்டு, எண்ணெயை விட்டு வைத்துக்கொண்டு கணேசன்பூசை செய்து, தானியபுடத்தில் ¼மண்டலம் வைத்தெடுத்து முழுகவும்.

***பத்தியம்:*** புளி, புகையிலை ஆகாது.

**பித்தத்துக்குத் தைலம்**

| | |
|---|---|
| கீழ்க்காய்நெல்லி | காத்தட்டி |
| மொசுமொசுக்கை | பொன்னாங்காணி |
| கரிப்பாற்சீரர் | செங்கழுநீர் |
| நெல்லிக்காய் | சித்தகத்தி |
| செவ்விளநீர் தண்ணீர் | |

வகைக்கு ¼படி, பசுவின்பால் 1 படி

| | |
|---|---|
| வெற்றிலைச்சாறு | இஞ்சி |
| உள்ளி | எலுமிச்சம்பழம் |

வகைக்கு ¾படி

| | |
|---|---|
| குருந்தொட்டிவேர் 5 | வில்வவேர் 5 |

மேற்படி வேரை குறுகத்தரித்து மூன்றுபடி தண்ணீர் விட்டு, ஒன்றாய்க் குறுக்கி,

மிளகு 1, சீரகம், அதிமதுரம், சாதிக்காய், பத்திரி, கிராம்பு, இலவங்கப்பத்திரி, குங்குமப்பூ, கோஷ்டம், தேவதாரம், செந்சந்தனம், பூலாங்கிழங்கு, வெட்டிவேர், சாம்பிராணி,

முன் கஷாயம் விட்டரைத்து, ஒருபடி நல்லெண்ணெயில் சாறு, பால் அரை மருந்து ஆக ஒன்றாய் சேர்த்துக் கலக்கி மெழுகு பருவத்தில் தயிலம் வடிகிறபோது, கலசத்தில் சாம்பிராணி, பச்சைக்கற்பூரம், பூலாங்கிழங்கு, கோஷ்டம், தேவதாரம், மிளகு, சீரகம் ஆக வகைக்கு 6½வீதம் பொடித்துப்போட்டு, தயிலம் வடித்து கூல்பதங்கம் செய்யவும். முழுகிற அன்று புளி, புகையிலைத் தள்ளவும்.

### ஊது சோகைக்கும், மஞ்சள் காமாலைக்கும்

கொத்தமல்லியை பழுது பார்த்து, வைத்துக்கொண்டு சாதம் வடிக்கிறபோது, மேற்படி மல்லிகையை பிடி ஒன்று போட்டு, வடித்து வைத்து, மூடிவைத்து, உதையத்தில் நன்றாய்ப் பிசைந்து, வடிக்கட்டிக் கொடுக்கவும். மூன்றுபொழுது கொடுக்கவும்.

***பத்தியம்:*** உப்பில்லாப் பத்தியம்.

### கபால இடிக்கு

ரசம் 5 வராகன், அதிமதுரம் 10 வராகன், தேன் ¾படி நன்றாய் அரைத்து, மிளகுப் பிரமாணம் உருண்டை செய்து, காலை, மாலை இரண்டுவேளை சாப்பிடவும்.

***பத்தியம்:*** பழையது ஆகாது.

### வாதமேக புஷ்டிக்கு

நடுத்தரமான தேங்காயை கண்திறந்து நீரைப்போக்கி திருகுக்கள்ளிபாலை வாங்கி உள்ளேவிட்டுக் காஞ்சூரையின் முளைகொண்டு மூடி, புளியம்விறகு கொண்டு மூடி எரித்து, வெந்தபோது எடுத்து அரைத்துக் குழம்பாக்கி வைத்துக் கொண்டு, அரைக்குக்கீழ் தடவிப் போட்டு, மாலையில் வெந்நீர் விடத்தீரும்.

***பால் உண்டாக:*** வாளைவேரும், தேவதாரமும் தேனிலரைத்து முலையில் தடவவும். பால் சுரக்கும்.

### வீங்கு வாதம்

கொடுவேலிவேர்2 வராகன், கருஞ்சூரைவேர்2 வராகன், இசுங்கம்வேர் 2 வராகன், முக்காவேளைவேர் 2 வராகன், இலுப்பையிலை ½வராகன், சுக்கு 2 வராகன் ஆக இவ்வளவும் தட்டி நொறுக்கிச் சட்டியில் போட்டு தண்ணீர் 2 ¼ படி விட்டு வற்றவைத்து 3 ½ நாள் 7 போது சாப்பிடவும்.

***பத்தியம்:*** உப்பு ஆகாது, வாதம் 80-ம் தீரும்.

### குழந்தைகளுக்கு பேதி நிற்க

புளியாரையும், வாழைப்பூவும், ஒன்றாய்ச் சேர்த்து, புட்டவியலாக அவித்து, பிழிந்து தேன் கூட்டிக் கொடுக்கவும். பேதி நிற்கும்.

### மாதுளம் சமூலம்

அமுர்த சர்க்கரையைச் சேர்த்திடித்து, குழம்பாக்கி ஆவின் வெண்ணெய்க் கூடச்சேர்த்து, ஜாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலரிசி, பொடித்துக் கிண்டிக் காய்ச்சி, மெழுகு பதத்தில் இறக்கிக்கொண்டு, பூசைசெய்து வைத்துக்கொண்டு, பிள்ளைகளுக்கு 1 கரண்டி வீதம் கொடுக்கவும்.

**தீரும் வியாதி:** கணை-18, தோஷம் போகும். வயிற்றிரைச்சல், கழிச்சல் தீரும்.

### சிரங்குக்கு

கெந்தகம் 2 பலம், குண்டுசட்டியில் பசுவின்பால் விட்டு, மேல்சீலை வண்டு கெட்டி, அதின்மேல் கெந்தகத்தை வைத்து, மேல்சட்டி மூடி, குழிக்குள் வைத்து மேல் சட்டிமேல் தீயெரித்தால், அச்சட்டியில் கெந்தகம், இறங்கி இருக்கும். இந்தப்படிக்கு பத்துதரம் சுத்திசெய்து, அதில் இடைக்கிடை சீனி சேர்த்துப் பொடித்து, இரையளவு 10 நாள் இருபது பொழுது சாப்பிட சிரங்கு, சூலைப்புண், மேகப்பத்து இது முதலானது கேட்கும்.

**பத்தியம்:** கடுகு, நல்லெண்ணெய் தள்ளவும்.

### கண்ணீருக்கு

அதிமதுரம், சீரகம், கோஷ்டம், கையான்தகரை, செங்கழுநீர், கஸ்தூரிமஞ்சள் வகைக்கு ½பலம் ஆகச் சேர்த்து, பசுவின்பால் 1 படி, நல்லெண்ணெய் 1 படி, கொடுப்பைச் சாறு 1 படி, நெல்லிக்காய்ச்சாறு படி, கற்றாழைச்சாறு 1 படி,

மேல்ப்படி மருந்தை அரைத்து, மேல்படி சாத்தில் கலக்கி மெழுகு பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு நெல் பதங்கம் வைத்து முழுகிவரவும்.

***பத்தியம்:*** புளி தவிரவும்.

**பீனிசம் மண்டைச் சூலைக்கு**

சவரி இலை, பழச்சாறு, பொடுதலை, கையாந்தகரைச் சாறு, பசுவின்பால் வகைக்கு 1 படி சேர்த்து, நல்லெண்ணெய் 1 படி கலக்கி மெழுகுபதத்தில் வடித்து முழுகிவரவும். மிளகுரசம் வைத்துச் சாப்பிடவும். போகம் தவிர்க்கவும். வியாதி தீரும்.

தலைமுடி வளர

| | |
|---|---|
| ஆலம் விழுது | நுனிக்கொழுந்து |
| சவரிக்கொழுந்து | அவுரி இலை |
| தாழம்விளரு | முனை |

வகைக்கு ½பலம்,

| | |
|---|---|
| அரைக்கீரைவிதை | மிளகு |
| சீரகம் | கோஷ்டம் |
| பூலாங்கிழங்கு | விளாமிச்சம்வேர் |
| புழுக்கைவேர் | |

வகைக்கு 1 வராகன்,

ஆக சேர்த்திடித்து நெத்து தேங்காயில் கண்திறந்து சிலதைக் கொட்டிவிட்டு, அதற்குள் மேல்படி மருந்தை அடைத்து, நாருத்தம் முனைக்கிடா விசாக்கடையில் ஒரு மண்டலம் புதைத்தெடுத்து, ஒரு கீற்றுத் தேங்காயும், நெல்லிக்காய்ப் பிரமாணம் மருந்தும் அரைத்து அச்சிலத்தில் ஒன்றுவிட்டு ஒருநாள் தலையில் தேய்த்து ஸ்நானம் பண்ணி வரவும். தலைமுடிக் கறுப்பாக வளரும்.

### யூனாளி கபால இடிக்கு

ரசம் 5 வராகன், அதிமதுரம் 1 வராகன், கரியாப்பவளம் 1வராகன், தேன் படி, இரண்டு சாமம் அரைத்து மிளகுப் பிரமாணம் உருண்டைசெய்து, உதையம், மாலை இரண்டுபொழுது சாப்பிடவும்.

**பத்தியம்:** பழையது தள்ளவும். கரப்பான் பதார்த்தம் தள்ளவும், சாப்பிடுகின்றபொழுது நல்லெண்ணெய் தவிர்க்கவும். மருந்து விட்டு மறுநாள் நன்னாரிவேரும், இருபத்தொரு மிளகும் போட்டு ½படி ஜலம்விட்டு அரைக்காலாக வற்றவைத்துக் காலமே இரண்டுநாள் கொடுக்கவும்.

### ஒருதலை இடிக்கு

சித்தகத்திச்சாறு ¼படி, நல்லெண்ணெய் ¼படி, கூட விட்டுக் கிண்டி, ரவியில் வைத்துக் காய்ச்சிப்பருவத்தில் இறக்கிக் கலசத்தில் நல்ல சாம்பிராணி பொடித்துப்போட்டு, எண்ணெயை விட்டு, தானியபுடத்தில் வைத்து, முழுகி வரவும். முழுகின அன்று புளித்தள்ளவும். மேல் கண்டிக்கிறபடி எருக்கிலைச் சாற்றிலும் செய்யலாம். எருக்கிலம்பாலைத் துணியில் வைத்து ஏலமும், மஞ்சளும் நுணிக்கி துணியில் வைத்துச்சுத்தி புகை வாங்கவும். தீரும்.

### பீனிசத்துக்கு மேல்படி எட்டுக்கு

பேய்ச்சுரை, பேய்ப்பீக்கல் இந்த இரண்டு விதை எடுத்து அரைத்து, நல்லெண்ணெயில் கலக்கிக் காய்ச்சி மூன்றுதரம் தலையில் தேய்த்து, நாசியில் நசியஞ் செய்தால் தீரும்.

### பீனிசத்துக்கு ஷெ எட்டுக்கு

சவரியிலைச்சாறு 1 நாழி, பழச்சாறு 1 நாழி, பொற்றலைச்சாறு 1 நாழி, கையான்தகரைச்சாறு 1 நாழி, பசுவின்பால் 1 நாழி மிளகு 1 பலம், மேற்படி பால்

விட்டரைத்து, நல்லெண்ணெய் படி ஒன்றில் கலக்கி மெழுகு பதத்தில் வடித்து முழுகி வரவும். மிளகுச் சாறும், சாதமுஞ் சாப்பிட்டு வரவும்.

***பத்தியம்:*** போகம், நீக்கவும்.

**தீரும்வியாதி:** கபாலவலி, கபாலசூலை, பீனிசம், மண்டைசூலை, நேத்திரத்தின் வியாதி, நீர்க்கடுப்பு, மேகச்சூடு ஆக இவ்வளவும் தீரும்.

**மாலைக்கண்ணுக்கு**

வெள்ளாட்டு ஈரலை வகுந்து கருஞ்சீரகம், நுணுக்கி வைத்துச் சுட்டுத் திண்ணவும்.தீரும்.

**தலைவலிக்கு**

நாய்ப்பாகலிலை சாத்தில் சீலையிலூட்டித்திரித்து நாசியில் புகை வாங்கத் தீரும்.

**யுனானி கண்படலத்துக்கு**

கருவைக்கொழுந்து அரைத்து சீரகஞ் சேர்த்துக் கிளிக்கட்டி முலைப்பால் விட்டு, அடுப்பில் வெதும்பி கண்ணில் ஒத்திப் புளியவும். தீரும்.

**கண்ணில் ரோமம், புழுவெட்டுக்கு**

ஆதிவாரம் விதையம் ஆனைநெருஞ்சியை சமூலத்தோடே வாய் பேசாமல் பிடுங்கி அரைத்து புருவத்தில் மையிட்டு, பிடறி, முதுகு, கால், கை இந்தத் தானங்களில் நல்லெண்ணெயைத் தடவி ரவியில் இருக்கவும். தீரும்.

**காது குத்தலுக்கு**

முட்டை தோட்டைப் புடம்போட்டு, எடுத்து நுணுக்கிப் வைத்துக்கொண்டு எலுமிச்சம்பழச் சாற்றில் மேற்படி பொடியைப் போட்டுக் காதில் விடத்தீரும்.

### குழந்தைகளுக்கு காது கேளாததற்கு

பன்றி முள்ளை புங்கெண்ணெய் கொண்டு நன்றாய் அரைத்துக் காதில் விட்டு பஞ்சுகொண்டு அடைக்கவும். இப்படி அஞ்சு முறை பாத்து செய்யவும்.

### வாய்ப்புண்ணுக்கு

ஆலம் வேர்க் கொழுந்துஞ் சீரகமுஞ் சேர்த்து, பசுவின் பச்சைப் பாலில் அரைத்து மேற்படி பாலில் கலக்கி மூன்றுநாள் சாப்பிடத் தீரும்.

### பல்லில் இரத்தம்-சிங்கரோகத்துக்கு

பொன்னாவாரையிலை எலுமிச்சங்காயளவு கசக்கி, இரண்டு சிரங்கை நல்லெண்ணெயில் மேற்படி இலையோடே வைத்துக்கொண்டு உள்ளுக்கு ஒருகரண்டி குடுத்து தலையிலும், நெத்தியிலும், முதுகிலும், காதிலும் எண்ணெய் விட்டு மூன்றுநாள் 6வேளை இப்படிச் செய்யவும். பத்தியமாய் வரவும்.

### பல்வலிக்கு

துருசு 2வராகன், எருமைச் சாணியில் தேய்த்து, அலம்பி இரும்புக்கரண்டியில் போட்டு மாகாணி படி சிலம் விட்டுக் காய்ச்சிக் குறுகிவரும் சமயத்தில் மாய்க்கா 3 வராகன், காசுக்கட்டி 3 வராகன், கருவப்பட்டை 1 வராகன் ஆகப் பொடித்து வடிகட்டி, மேற்படி கரண்டியில் போட்டு, இரும்பினால் ஒருசாமம் தேய்த்து தேங்காய்க் குடுக்கையில் அடைத்து பல்விலக்கத் தந்தசூலை முதலானது தீரும்.

### தந்த சூலைக்கு

பல்வலியாக ரத்தம் வருகிறதற்கு பொன்னாவாரை இலை, குன்றிமணியிலை, துத்தியிலை இந்த மூன்று வகைக்கு, ஒரு எலுமிச்சங்காயளவு கசக்கி இரண்டு சிரங்கை

நல்லெண்ணெய் விட்டு, மெழுகு பதமாகக் காய்ச்சி, உள்ளுக்கு ஒரு கரண்டியாகவும், தலையிலும், நெற்றியிலும், மூக்கிலும், காதிலும் எண்ணெய்விட்டு மூன்று நாளொரு வேளை இப்படிச் செய்யவும். பத்தியம் கார்க்கவும்.

### முகவாத சன்னிக்கு

வசம்பைத் தட்டி கஸ்தூரி சேர்த்து, பொட்டணமாகக் கட்டி முகந்து பார்க்க சுகசன்னி முதல் தீரும்.

### துரத்தலுக்குள் இரத்தம் கண்டால் சயத்துரத்தலுக்கு

நிலவேரை அரைத்து தவிட்டில் போட்டுப் பிரட்டி, நெல்லிக்காய்ப் பிரமாணம் மூன்று, மூன்று உருண்டை செய்து இப்படி மூன்று பொழுது சாப்பிடத் தீரும்.

### வேறு

ஆடாதொடைச்சாறு 2 படி, பசுவின்பால் 1படி, மேற்படி நெய் 1 படி ஒன்றாய்க் கலந்து, ஆனைத்திப்பிலி 1 பலம், அரிசித்திப்பிலி 1 பலம், இந்துப்பு 2 பலம், சத்திச் சாரம் 1 பலம், கொடுவேலி 1 பலம், மேற்படிகளை பாலில் அரைத்துக் கலக்கி மெழுகுபதத்தில் இறக்கிவைத்துக்கொண்டு 10 முறை சுத்தி செய்து, தாளகம் 1 பலம், பொரித்தமுட்டைத்தோடு 1பலம், மேற்படி வகை இரண்டுஞ் சமனெடை தூக்கி சுண்ணாம்புத் தேன் தண்ணீரில் நாலு சாமம் அரைத்து காசுபோல் வில்லைத் தட்டி ரவியில் வைத்து சீலைசுத்தி கவுதாரியிடம் போட்டு, எடுத்துக்கொண்டு ஒருபணவிடை மேல்படி நெய்யில் போட்டு, ஒருமண்டலஞ் சாப்பிட்டு வரவும்.

***பத்தியம்:*** புளித்தள்ளவும். வெள்ளாட்டுப்பால், மோர் சேர்க்கவும்.

### இரத்தக் காசத்துக்கு

சீலை சுட்ட சாம்பலோடே எள்ளு நுணுக்கிப் பொடி பண்ணி சேர்த்துக் கொடுக்க காசம் தீரும்.

### முன்சொன்ன சயத்துக்கு

நெய்தேய்த்து முழுகவும். கடுகு, நல்லெண்ணெய் நீக்கவும்.

### வாயுவுக்கும், வயத்துவலிக்கும் மருந்து

பச்சரிசியை நன்றாய் மாவாக்கி ஒரு கலசத்தில் வைத்து, அந்த அளவுக்கு கொடிக்கள்ளிப் பால் விட்டுக் கிளறி வெயிலில் வைத்து (3 நாள் வைக்கவும்) செம்பு நிறமாக வறுத்து வைத்துக்கொண்டு, ஆள்தராதரங் கண்டு ஒரு போதை தரங்கண்டு, முக்கால் துட்டு அரைத்துட்டு, கால் துட்டு, 1 எடையாகக் கொடுக்கவும். தீரும். பேதி அதிகங்கண்டால் உப்புப் போட்டுக் கொடுக்கவும். பசுவின் மோரிலுங் கஞ்சிக் கொடுக்கலாம்.

### அந்திர வாய்வுக்கு

புளியிலைத் துவைத்து, மூன்றுபடி தண்ணீர்விட்டு, உழக்காகக் காய்ச்சி சீரகத்தை அரைத்துப் போட்டு கொடுக்கத் தீரும்.

### பாலுண்டாக

பூனாகத்தைக் கொண்டு வந்து பசுவின்பாலில் அரைத்து மூன்று பொழுது கொடுக்கப் பால் உண்டாகும். ரஸ்தாளிப் பழமாவது,அரிசிக்கதலி பழமாவது , பசுவின் தயிரில் சேர்த்துக் கொடுக்கவும். நாவுரி அரிசி, வால் மிளகு மேற்படி தயிரில் அரைத்துக்கொடுக்கவும். இந்த இரண்டு மருந்தும் மூன்றுபொழுது கொடுக்கவும். பாலுண்டாகும்.

### பால்சுரக்க

வாளைவேரும், தேவதாரமும் தேனில் அரைத்து முலையில் தடவப் பால் சுரக்கும்.

## கணை மருந்து

அத்தியின் வடக்கே போகிற வேரில் வெட்டி அதின் கீழ்ப் புதுக்கலசம் வைத்தால் ஜலம் இறங்கும். அதை எடுத்து சீனி 2 பலம் கூடப்போட்டு வைத்துக்கொண்டு தினசரி 1/8 படி மேற்படி சாப்பிட்டு வரவும்.

## வயிற்று வலிக்கு

வேப்பிலையும், உப்பும் சட்டியில் போட்டு, கருக்கிக் கெட்டிப்போட்டு, விளக்கெண்ணெய் ஒரு கரண்டி விட்டு இந்துப்பு ஒரு கழஞ்சி நுணுக்கிப்போட்டு, இரண்டு ஈருள்ளி நொடிஞ்சு போட்டுக் காய்ச்சி வடித்துச் சாப்பிடவும். இப்படி மூன்றுநாள் சாப்பிடவும், தீரும்.

## பேதிக்கு மருந்து

விளக்கெண்ணெய் 1படி, கரிப்பான்சாறு 1 படி, பிரமிச்சாறு ½படி, பாகயிலைச்சாறு ¼படி சேர்த்து மிளகு களிப்பாக்கு,கடுக்காய், கறிவேப்பிலைச்சாறு ¼படி, பதக்கு நீர்விட்டு எட்டில் ஒன்றாய்க் கருக்கி மேற்படி எண்ணெயில் விட்டுக் கடுக்காய்,கடுகுரோகணி, மிளகு, உள்ளி ஆக வகைக்குப் ½பலம் அரைத்துப் போட்டுக் கலக்கி மெழுகு பதத்தில் வெந்திறக்கி வடித்து வைத்துக்கொண்டு, கரண்டி வீதங்கொள்ளவும். உஷ்ணந் தீரும். மூலச்சூடு, பித்தம், வாய்வு, நீர்க்கட்டு, வாயில் நீரூரல் ஆக இவ்வளவுந் தீரும்.

## பாண்டு சோகைக்கு மருந்து

நீர்முள்ளி, நாயுருவி, பலிங்கதிர், புளியந்தோடு ஆக வகை வீதம் சாம்பல் எடுத்து வைத்துக்கொண்டு, அஞ்சாக பகிர்ந்து கண்டங்கத்தரி, பிறாயிலை, முள்ளியிலை ஆக வகை வீதம் போட்டுக் கிஷாயஞ் செய்திருத்து வைத்துக்கொண்டு, பொரிகாரஞ் சுத்தி பண்ணிப்பொரித்து, சுக்கு, மிளகு, பூண்டு வகைக்கு 1 வராகன் நேர்வாளஞ் சுத்தி பண்ணி முறை போக்கி

போதைக்கு அரைப்பருப்புக்கூட்டி, உவருப்புப் போட்டு விளக்கெண்ணெய் விட்டுக் கொடுக்கவும்.

***பத்தியம்:*** உப்பு ஆகாது. தீரும்.

**காமாலைக்கு**

எருச்சாணிப்பாலும், மேற்படி தயிரும், சீரகம், வெங்காயங் கூட்டி, அரைத்துக் கலக்கி மூன்று நாளாறு பொழுது சாப்பிடத் தீரும்.

**வேறு**

இலவஇலையைத் துவைத்து மாட்டுக்கோமியம் விட்டுப் பிசைந்து, சாறு எடுத்து ஒரு போதைக்கு ¼ படி, அஞ்சுபொழுது சாப்பிடத் தீரும்.

**வேறு**

காந்தம், அரபொடி, மிளகு, கரிப்பான்மூலம் வகைக்கு 3 பலம், இந்த மூன்றுவகை இரண்டுநாள் விடாமல் அரைத்து கழற்சிக்காய்ப் பிரமாணம் உருண்டை செய்து, வேளை ஒன்றுக்கு உருண்டை வீதம் 12 நாள் இஞ்சிச்சாற்றில் கொடுத்து மோரும், அன்னமும் பத்தியங் கொடுத்து அப்பால் 6முறை ஒன்றை விட்டொருநாள் முக்குட்டெண்ணெய் தேய்த்துத் தானம் செய்துவர சகல காமாலையும் தீரும்.

**சாந்தாதி, பெரும்வயிறு, நீர்க்கோவை, சோகை, காமாலை**

நீர்முள்ளிச்சாறு
முள்ளிக்கீரைச்சாறு
சிறுகீரைச்சாறு
கரிப்பான்சாறு
பெருகீரைச்சாறு

ஆகவகைக்கு ¼ படி சேர்த்து,

மஞ்சள்
கஸ்தூரிமஞ்சள்
சுக்கு
மிளகு

| | |
|---|---|
| திப்பிலி | நருக்குமூலம் |
| வால்மிளகு | ஓமம் |
| வெள்வெங்காயம் | கருஞ்சீரகம் |
| கடுக்காய் | சதகுப்பை |
| கிராம்பு | சாதிக்காய் |
| சாதிக்காய்ப்பத்திரி | ஏலரிசி |

ஆக வகைக்கு 6 வராகன் சேர்த்து, இளவறுப்பாக வறுத்துச் சூரணஞ் செய்து வத்திரகாயஞ் செய்து வைத்துக் கொண்டு கருப்புக்கட்டி 5 பலம், மேற்படி சாத்தில் கரைத்து பாகுசெய்து, மேற்படிச் சூரணத்தை போட்டுக் கிண்டி பசுவின்நெய் விட்டுக் கிண்டி பருவத்தில் தேன் ¾படி விட்டுக் கிளறி இறக்கி வைத்துக்கொண்டு, ஒருபோதைக்கு இரு எலுமிச்சங்காயளவு சாப்பிட்டு, வரவும். இச்சாப் பத்தியம். மேற்சொல்லிய வியாதிகள் தீரும்.

**பெரும்பாட்டுக்கு**

கவுதம்பை அரைத்து குறுவை அரிசி மாவாக்கி, பனங்கருப்புக்கட்டி சேர் 6 நாள் சாப்பிடத் தீரும்.

**வயற்றளைச்சலுக்கு**

சீனியும், எருமை வெண்ணெயும் குழைத்து 3 நாள் காலையில் சாப்பிடவும். அனுபோக வைத்தியம்.

**சூதக வாய்வுக்கு**

சுக்கு ½பலம், மிளகு ½பலம், பழைய கம்பளி கருக்கிய சாம்பல் மாங்காய் அளவு, கள்ளிவாளைவேர் 1, ஊசித்தகரைவேர் 2, பழையவெல்லம் 1 இதுவெல்லாமரைத்து 5 நாள் தீரும். பாலில் கஞ்சி வைத்துச் சாப்பிட்டு வரவும். தீரும்.

**கெர்ப்பம் உண்டாக**

கருஞ்சூரை வேர்ப்பட்டை அரைத்து வெண்ணெய் சேர்த்து முழுகின நாலா நாளில் சாப்பிட பிள்ளையுண்டாம்.

### கெற்ப ஸ்திரீக்கு வலசலம் அடைத்தால்

எலுமிச்சங்காய்ப் பிரமாணம் பழம்புளியும், தேத்தான் கொட்டைப் பிரமாணம் வெங்காரமுஞ் சேர்த்து அரைத்து கோழிமுட்டை வெள்ளைக்கருவில் சேர்த்துக்கொடுக்க வலசலம் விடும்.

### வயிற்றுக்குள் செத்தபிள்ளை விழ

நாங்குழுவை அரைத்து, நல்லெண்ணெயில் கலக்கிக் கொடுக்க விழும்.

### வேறு

கடுகை அரைத்து நல்ல சாராயத்தில் கலக்கிக் கொடுக்கவிழும். இரண்டு பொழுதும் வெறுஞ்சாராயத்தில் கொடுக்கவும். உத்தமதாளி இலையும், பெருங்காயமும், முலைப்பால் விட்டரைத்து தொப்புள் தானத்திலிருந்து யோனி வரைக்கும் பூசவும். பின்பு மேல் நோக்கிக் கமுகிப் போடவும்.

### பிள்ளைப்பிறந்து நஞ்சு விழாதிருந்தால்

வேப்பங்கொழுந்து, கருவப்புல்லுக் கொழுந்து, முருங்கைக் கொழுந்து வகைக்கு ஒருபடி தண்ணீர் 1/8 வற்ற வைத்து உள்ளுக்குக் கொடுக்க விழும்.

### வாதத்துக்கு

| | |
|---|---|
| சென்னகரப்பட்டை | உவாய்ப்பட்டை |
| இசங்கம் வேர் | நொச்சிவேர்ப்பட்டை |
| அமுக்கிராவேர் | நூறாணவேப்பம்பட்டை |
| வாதாமடக்கிவேர்ப்பட்டை | கொடுவேலிவேர் |
| பிரப்பங்கிழங்கு | வெள்ளறுகு |
| சிவனார்வேம்பு | ஆயிலியப்பட்டை |

வகைக்கு 15 பலம்

ஆகச் சேர்த்து குழித்தைலமிறக்கவும். வேப்பெண்ணெய் 1½ படியில் மயிலிறகு ஒரு பிடி குருகத்தரித்து, இசங்கம்வேர் சீவி பொட்டியும் கூட மேற்படி எண்ணெயில் குண்டுசட்டியில் போட்டு சந்துவாய் சீலைமண் செய்து காய்ச்சிப் பருவத்தில் எடுத்து வைத்துக் கொண்டு, ஒரு மனுசாளுக்கு மேற்படி எண்ணெய் ½ மாகாணியும், மிளகு, குழித்தைலம் ஓரை மாகாசிலுமாக சேர்த்து ஐந்து பொழுது கொடுக்கவும்.

***பத்தியம்:*** உப்புத்தள்ளவும். மறுபத்தியம் வறுத்துக் கூட்டவும். மேலுக்கு படி குழித்தைலமும், தலைகுமட்டி வேப்பெண்ணெய்த் தைலமுமாக இருக்க வேறு ஒரு மண்டலம். பத்தியம், கார்க்க வேறு வாதம் முடக்குவாதம் தீரும்.

## பெருமூத்திரத்துக்கு

காட்டாத்திப் பட்டையைக் காயவைத்து, இடித்துத் தூள் 5 பலம், தேத்தான்விரைத்தூள் 5 பலம், வெள்ளைக் குன்றிமணி மேல்தோல்போக்கி, உள்முனை போக்கின பருபாதூள் 5 பலம், பெருமரத்து விரை பொடி 5 பலம், இந்த இருபது வராகனிடைத் தூளும் ஒன்றாய்க்கலந்து ஒரு போதைக்கு வெருகடித்தூள் எருமை மோரில் குழைத்துக் கொடுக்கவும். சாத்தியமான நீரிழிவு நிற்கும்.

## நீர்ச்செருப்புக்கு

வெள்ளரிவிரை 1 படி, கீழ்காநெல்லி இது இரண்டும் சமனாய், நன்றாய் அரைத்து நல்லெண்ணெய் விட்டுக் கிளறி பூனாகம் ஒருபலம் போட்டு, மெழுகுப்பதத்தில் இறக்கி ½பலம் வெங்காரம் பொரித்துப்போட்டு, நன்றாய்க் கிளறி வைத்துக்கொண்டு உள்ளுக்கு ஒரு கரண்டி எண்ணெய்க் கொடுத்து வரவும்.

***பத்தியம்:*** மறுபத்தியம் கழித்து உப்பு வறுத்துக் கூட்டவும். தீரும்.

## மேகத்துக்கு

ஆத்தியிலையும், ஈருள்ளியும் இடித்து நீற்றுப்பாகம் விட்டுப் பிழிந்து நல்லெண்ணெய் விட்டு மூன்றுபொழுது கொடுக்கத்தீரும்.

இளநீரை மேல்தோல் போக்கிக் குடைந்து 5 தேத்தாங் கொட்டையும், ¼பலம் சீரகமும் போட்டு மூடி தெப்பம் போட்ட வித்து வைத்து மறுநேரம் மேற்படி தண்ணீரிலரைத்துக் கலக்கிக் கொடுக்கவும். இப்படிக்கு மூன்றுபொழுது கொடுக்கவும். தீரும். ஆவாரை சமூலங் கொண்டு வந்து குறுக்கத் தரித்து ஒரு பாண்டத்தில் பதக்குத் தண்ணீர்விட்டு *1/8* படி வெந்தயமும், ½பலம் சீரகமும் மேற்படி மருந்து மூன்றும் போட்டு, அடிகுடிநீராக வற்றவைத்து போதைக்கு *1/8* படியாக பசுவின் வெண்ணெய் போட்டு, நான்கு,ஐந்துமுறை சாப்பிட்டு வரவும். தீரும்.

## மேகம், வெட்டைப்புண், அரையாப்புக்கு

இதன் கீழ் மருந்துக்கு நன்றாய்ப் பத்தியம் காக்கவும். கைகண்டது.

சங்கம்குப்பிச்சாறு ¼படி, கழுதைலத்திச்சாறு ¼படி, நல்லெண்ணெய் ¼படி, ஆக ஒன்றாய் சேர்த்து கருஞ்சீரகம், கார்கோலரிசி, கஸ்தூரி மஞ்சள், வேம்பாடம் பொடி, சூடன் ஆக வகை சமனாகச் சேர்த்து பொடிபண்ணி மேற்படி சாறுவிட்டு அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வைத்துக்கொண்டு துட்டெடைச் சாப்பிடவும். மூன்று நாள் உப்புத் தவிரவும்.

## இரத்தமேகத்துக்கு

வெள்ளுள்ளி அரிசி ஒரு சிரங்கை, எள் ஓரசிரங்கை இரண்டையும் மூன்றுபொழுது சாப்பிடவும். மேகம் அதை சார்ந்தப் பாரிச வாய்வுந் தீரும். உப்பாகாது.

## பவுத்திரத்துக்கு

கார்த்திகைக் கிழங்கை உமிழ்நீரிலரைத்துப் புண்ணில் போடத்தீரும்.

## அரையாப்புக்கு

வேலிப்பருத்திக்கு ஞாயிற்றுக்கிழமை சூரிய உதயத்தில் பிள்ளையார் வைத்து, வெற்றிலைப்பாக்கு, தேங்காய் உடைத்து வைத்து, தூபதீபம் கொடுத்து பிறந்த மேனியாக நின்றுகொண்டு, இன்னார் மகன், ஈன்றதுக்கு வந்த அரையாப்புப் பட்டுப்போக சிவா வென்று சொல்லி, ஒரு அருப்பாக முடு ஒட்ட அறுத்துப்போடவும்.

ஆவாரையிலைக் கொட்டூர் கொழுந்தும் பூவும், எலுமிச்சங்காயளவு அரைத்து மாகாணி ½மாகாணி நல்லெண்ணெயில் குழப்பி 3 நாள் 3 பொழுது உதயம் சாப்பிடவும். தீரும். சூரிவேர், வேளைவேர், உள்ளி ஆக வகை மூன்றும் அரைத்து நல்லெண்ணெய்க் கரைத்துக் கொடுக்கத் தீரும்.

***பத்தியம்:*** உப்புத்தள்ளவும்.

## மூலமுளைக்கு

குதிரைக்குளம்பு, சீனின் பொடி, மிளகு, சுக்கு, இந்துப்பு இவைகளை பழச்சாற்றில் அரைத்து முனையில் பூசி கழுதைக் கத்தகத்தை நெருப்பில் போட்டு புகைக் காண்பிக்கவும். முளை கரைந்து போகும்.

## அண்டவாய்வுக்கு

கருஞ்சீரகம், வெள்ளைப் பூண்டும், தேன்விட்டு, அரைத்துச்சாப்பிடத்தீரும்.

நொச்சி, களச்சிக்கோளி, சாரணை, ஆடாதொடை வேளை, வேலிப்பருத்தி, கோழியாவரை இவைகளின் கொழுந்து 1 பிடி, எருக்கம்பூ 1 பிடி, வசம்பு, சித்திரமூலம், மிளகு, திப்பிலி, ஓமம் வகைக்கு 3 வராகன், வெள்ளுள்ளி, கழற்சிப்பருப்பு வகைக்கு 5 வராகன், பெருங்காயம் 1 வராகன் இவைகளை வேலிப்பருத்தியிலைச் சாற்றால் அரைத்து ஒரு கழஞ்சு வீதம் உண்டைசெய்து நிழலில் உலர்த்திக் கொண்டு, சங்கங்குப்பி, நொச்சி, உத்தாமணி, முருங்கை சாறணை, கொடுவேலி, வரைசூலை வகைக்கு வீதம் ஒன்றாய்சிதைத்து கசாயம் செய்து அதில் ஒரு உண்டையை உரைத்து 13 நாள் கொடுக்கவும்.

***பத்தியம்:*** புளி,

ஒரு தேங்காய் பூவின் மத்தியில் தோல் நீக்கின வெள்ளைப் பூண்டை வைத்து புட்டவித்து, பூவை, பால் பிழிந்து பூண்டையும் ஒரு பல முருங்கப்பட்டையும் நன்றாய் அரைத்துச் சாறுபிழிந்து ஒன்றாய்க் கலந்து சாப்பிட்டு காற்றுப்படாத அறையில் படுத்துக்கொள்ளவும். இந்தபடி மூன்றுநாள் செய்யத்தீரும்.

### பாரிசவாய்வுக்கு மேற்படி வகைக்கு

பிரண்டைவேர்த் தோலியும், வெற்றிலையோடே கூடச் சேர்த்து, சுவைத்துத் தின்னவும். பின்னும் வெறும் வெற்றிலை போடவும். இப்படி மூன்றுபொழுது திண்ணவும். உப்பு நீக்கவும்.

அண்டங்காக்கை முட்டையுங் கழற்சிப் பருப்பு அரைத்து வில்லைத்தட்டிக் காயவைத்து எடுத்து ஓட்டில் வைத்து, மேல்ஓடு புடம்போட்டு எடுத்துக்கொண்டு, அனுபானஞ் சர்க்கரையிலாவது கருப்புக்கட்டியிலாவது கொடுக்கத்தீரும்.

## கிரந்திக்கு

மருதோணி, கள்ளிக்கொழுந்து, சங்கங்குப்பி இவை மூன்றுஞ் சமனாகச் சேர்த்தரைத்து ஆவின் நெய்யில் வெந்து கொடுக்கவும். உப்பு, புளி ஆகாது. மறுபத்தியம்,வறுத்துக் கூட்டிக்கொள்ளவும்.

விளக்கெண்ணெய் ½படி, கொடுவேலிவேர், எலுமிச்சங்காயளவு அரைத்து, அழிஞ்சிவேர்ப்பட்டை, மேற்படி வகைப்படி அரைத்து வசம்பு ½பலம், வெள் வெங்காயம் இதுகளை அரைத்துப்போட்டு, மேற்படி எண்ணெயில் கலக்கி காய்ச்சி வைத்துக்கொண்டு, உள்ளுக்கு மாகாணி படி சாப்பிடவும். கெந்தகம் சட்டியில் உருக வைத்து ஆவின்பால் விட்டெடுத்து நறுக்கி மேற்படி பாலில் சாப்பிடத்தீரும்.

## புற்றுக்கிரந்திக்கு ஸ்ரீகிரந்தி மேலுக்கு

தகரைவிரை 2 பலம், புளித்தமோரில் இரண்டுநாள் உப்புப்போட்டு அரைத்து, நல்லெண்ணெய் ½படியில் கலக்கி வெயிலில் வைத்து, செவ்வரளிவேர் ஒருபிடி, நீரடிமுத்து 2 பலம், இதுகளை அரைத்து எண்ணெயில் கலக்கி வைக்கவும்.

ரசம் ½பலம், கெந்தகம் ½பலம் இதைக்கல்வத்தில் போட்டு, வெற்றிலைச்சாறு விட்டு அரைத்து மேற்படி எண்ணெயில் கலந்து வெயிலில் புடம் வைத்து இரண்டுநாள் பிறகு மேலுக்கு போட்டு மாலையில் குளிக்கவும். இப்படி 7நாட்கள் செய்யவும்.

## காந்தலுக்கு

ஆவாரையிலை, அதிமதுரம், அகங்கிழங்கு, தாளைவிழுது ஆக இவ்வளவும் கஷாயம் செய்து சாப்பிடத் தீரும்.

### எலும்புருக்கிக்கு

மாதளம்பழச்சாறு ¼படி, ஆவின்பால் ¼படி, கலந்து சாப்பிடத்தீரும்.

### குட்டத்துக்கு

சங்கங்குப்பிச்சாறு ¼படி, ஈரவெங்காயம் 1 பலம் ஆகக்கூடச் சேர்த்து,இடித்து பசுவின்பால் ¼படி கலந்து சாப்பிடவும். 5 பொழுது சாப்பிடவும். உப்பாகாது. மறுபத்தியம், உப்பு வறுத்துக் கூட்டவும். 9-ஆம் நாள் ஓமம் அரைத்துக் கொதிக்கவைத்து முழுகவும். 11-வது நாள் இசங்கிலையும்,மஞ்சளும் ஓமம் அரைத்து நல்ல எண்ணெயில் காய்ச்சி முழுகவும். தீரும்.

### புண்கள் எல்லாவற்றிற்கும் மருந்து

சேங்கொட்டையை ஒன்றை நாலாகத் தரித்துச் சட்டியில் போட்டு, கொதிச்சவுடன் பசுவின் வெண்ணெய் போட்டு செம்பு நிறம்பார்த்து இறக்கிவைத்துக்கொண்டு, கோழித்தூவலினாலே புண்ணில் போடத் தீரும்.

### வாதத்துக்கு மேற்படி வகைக்கு

நண்டை இடித்துச் சாறு எடுத்து தேங்காய்ப்பாலில் மூன்றுபொழுது கொடுக்கவும். பத்தியம், புளி தவிர்க்கவும்.

சுக்கு, மிளகு, திப்பிலி, கருஞ்சீரகம், வகைக்கு 1 பலம். பரங்கிப்பட்டை, கருங்காளம் வகைக்கு 2 வராகன், கொடுவேலிவேர், முக்காவேளைவேர், கருஞ்சூரைவேர், வேப்பம்பட்டை வகைக்கு ஒரு வராகன் ஆக வகைக்குத் தட்டி நொறுக்கிப்போட்டு, ¼படி தண்ணீர் விட்டுக் காய்ச்சி ¼படியாக வற்றவைத்துக் கொடுத்து......லிங்கம், கர்ப்பூரம் உரைத்து இப்படி இரண்டரைநாள் அஞ்சுபொழுது கொடுக்கவும். உப்புத்தள்ளி சாப்பிட்டு வரவும். மறுபத்தியம், உப்பு வறுத்துக் கூட்டிச் சாப்பிடவும். தீரும்.

### பவுத்திரத்துக்கு

கார்த்திகைக் கிழங்கை உமினீரிலுரைத்துப்போடத் தீரும்.

### இரத்தக் கழிச்சலுக்கு

சாதிக்காய், சாதிப்பத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, இலவங்கப்பட்டை, இலவங்கம், ஏலம் வகைக்கு 1 படி, கஞ்சாயிடை 2 படி, அபின் எடை 1படி, வெல்லம் நான்கு, தேன் மேல்படி கடைமருந்தைத் தூள்செய்து மேற்படி கருப்புக்கட்டியை பாகுக் காய்ச்சி, பொடியைத்தூவி பதத்தில் தேன்விட்டுக் கிளறி இறக்கி வைத்துக்கொண்டு சாப்பிட்டு வரவும்.தீரும்.

### இரத்தமூலத்துக்கு

இலாமிச்சம்வேரைக் கஷாயம் செய்து 3 நாள் ஆறுவேளைச் சாப்பிடத்தீரும். விடத்தலைக் கொழுந்தை இடித்து ஒருபோதைக்கு ¼படியாக, மூன்றுநாள் ஆறுபொழுது சாப்பிடத்தீரும்.

### மேல்சொரிக்கு

இந்துப்பைப் பொடியாச் செய்து நறுநெய்யில் பொடியைப் போட்டுக் கிண்டி ரவியில் வைத்துத் தலைக்குத் தேய்த்து மேலுக்கும் போட்டுக் கிண்டி ரவியில் வைத்துத் தலைக்குத் தேய்த்து, மேலுக்கும் போட்டு, மறுநாள் ஸ்நானம் பண்ணத்தீரும்.

### குதிவாதத்துக்கு

மண்வெட்டியை காயப்போட்டு சித்தகத்தி இலை, எலுமிச்சங்காயளவு அரைத்து பசுவின் வெண்ணெய் அந்தப்படி சேர்த்து மண்வெட்டியில் வைத்து மிதிக்கவும்.இப்படி மூன்றுநாள் மிதிக்கத்தீரும்.

## வீங்கு வாதத்துக்கு

கொடுவேலிவேர், கருஞ்சூரைவேர், இசங்கம்வேர், முக்கவளைவேர் வகைக்கு 2 வராகன், இலுப்பையிலை ½பலம், சுக்கு 2 வராகன் ஆக இவ்வளவும் தட்டி நொறுக்கிச் சட்டியில் போட்டு தண்ணீர் 2¼ படியாக விட்டு, வற்றவைத்து 3½ நாள் ஏழு பொழுது சாப்பிடவும். உப்பு ஆகாது. வாதம் 80-ம் தீரும்.

## சுரத்துக்கு

நீர்முள்ளிவேர், சுக்கு, மிளகு சேர்த்தரைத்து எலுமிச்சங் காயளவு கொடுக்கவும்.

## குளிருக்கு

எருக்கலங் கொழுந்து அரைத்து நெல்லிக்காயளவு கொடுக்கவும்.

## பித்த வெடிப்புக்கு

மந்தஇலையை, பசுவின்பாலில் அரைத்து 7 பொழுது சாப்பிடவும். 7 பொழுது வென்னீர்த் தாரை விடவும். பிறகு எண்ணெய் ஸ்நானம் செய்து புளி கூட்டத் தீரும்.

## எலி விஷத்துக்கு

முருங்கைப்பட்டையிலை 4, மொச்சக்கொட்டை 4 பலம் ஆகச்சேர்த்து, தண்ணீர்விட்டு வற்றவைத்து, உள்ளுக்குக் கொடுக்கவும். இப்படி மூன்றுபொழுது கொடுக்கவும். உப்பு தவிர்த்து சாப்பிட்டு வரவும். தீரும்.

## பேறா கடி விஷத்துக்கு

நத்தசூரி இலையையும், தைவேளை அரைத்துக் காடியில் கரைத்துக் கொடுக்கவும். இப்படி மூன்றுநாள், மூன்றுபொழுது கொடுக்கவும்.

***பத்தியம்:*** உப்பு ஆகாது. கருவாப்பூச்சி விஷமுந் தீரும்.

### பூரான்கடி விஷத்துக்கு

சிறுநீரில் மேனியிலையை அரைத்து மூன்றுபொழுது கொடுக்கவும். உப்புநீக்கி, பத்தியம் வறுத்துக் கூட்டவும். தீரும்.

### இடுப்பு முறிவுக்கு

பாவல் இலையும், பிரமியிலையும் அரைத்துக் கொடுக்கவும். முறியும்.

### மேகம் 21-க்கு வல்லாரைக்கிருதம்

வல்லாரைச்சாறு கொடுப்பைச்சாறு
பொடுதலைச் சாறு
வகைக்கு 1 படி,

பழச்சாறு ½படி பசுவின்நெய்
பால், வகைக்கு 2 படி

சாதிக்காய் திப்பிலி
மாசிக்காய் சிங்கி
காட்டாத்திப்பூ வால்மிளகு
ஏலம் கிராம்பு
அதிமதுரம்
வகைக்கு 2 வராகன்

கூட்டி மேற்படி விட்டு அரைத்து மேற்படி சாறு நெய்யில் கலக்கி காய்ச்சி மெழுகுப் பருவத்தில் இரண்டு பலஞ் சீனி போட்டுக் கிண்டி வைத்துக்கொண்டு, நாள் ஒன்றுக்குக் கரண்டிவீதம் ஒருமண்டலம் சாப்பிட்டு வரவும். தீரும். பத்தியம், இச்சாப்பத்தியம்.

### அட்டாதிச்சூரணம்

சுக்கு, மிளகு, திப்பிலி, தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய், காயம், சிவதை, ஓமம், கார்கோலரிசி,

ஒட்டுக்காந்தம் வகைக்கு 3 வராகன் சேர்த்து சுத்திபண்ணி, நேர்வாளங் 6 கழஞ்சு சேர்த்து வெவ்வேறாக வறுத்து சூரணித்து வைத்துக்கொண்டு ஆராதாரம் கண்டுகொடுக்கவும்.

**பித்தம், கண்காசம், காதடைப்பு, மந்தத்துக்குத் தைலம்**

| | |
|---|---|
| கையான்தகரைச்சாறு | நெல்லிக்காய்ச்சாறு |
| நொச்சிச்சாறு | ஆதண்டைச்சாறு |
| நல்லெண்ணெய் | பசுவின்பால் |

வகைக்கு 1¼ படி,

அதிமதுரம் வகைக்கு 2 வராகன் அரைத்துப்போட்டுக் காய்ச்சி முழுகிவரத் தீரும்.

